உ

சிவமயம்

தமிழ்த் தெய்வந் துணை

# தொல்காப்பியப்

# பொருளதிகாரம்

## முதற்பாகம்

(நச்சினார்க்கினியம்)

இது

சென்னைப் பல்கலைக்கழகத் தமிழகராதிப்
பதிப்பாசிரியர் திரு. S. வையாபுரிப் பிள்ளை, B. A.,

B. L. அவர்களால்

ஓலைப் பிரதியைக்கொண்டு பரிசோதிக்கப்பட்டு,

மன்னார்குடி இயற்றமிழாசிரியர்

திரு. ம. நா. சோமசுந்தரம் பிள்ளை அவர்களது

அரிய ஆராய்ச்சிக் குறிப்புக்களுடனும் திருத்தங்களுடனும்

திரிசிரபுரம்

S. கனகசபாபதி பிள்ளை அவர்களால்

சென்னை இராயப்பேட்டை
சாது அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பெற்றது.

பவ ஆண்டு ஐப்பசித்திங்கள்
1934



## உள்ளுறை

பக்கம்

உ

சிவமயம்

சேவ்வேள் துணை

# பதிப்பாளர் முன்னுரை



"ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப் பியனடி
பல்காற் பரவுது மெழுத்தொடு
சொல்கா மருபொருட் டொகைதிகழ் பொருட்டே."

என்றும் இயற்கை நன்றமிழ் தமிழே
மொழியெனும் பெயரான் வழிவழி வளர்ந்து
பண்பட் டெழுந்து மண்படர் நாளில்
எழுத்துஞ் சொல்லும் வழுத்தும் வாழ்வியல்
துன்றும் பொருளும் ஒன்றொரு நூலாம்
பல்காப் பியமீன் தொல்காப் பியஞ்செய
ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப் பியக்குடித்
தோன்றிய புலவன் சான்ற
தொல்காப் பியனடி தொழுகுவம் யாமே.

அமிழ்தினுமினிய நம் தெய்வச் செந்தமிழ் மொழிக்கு ஒப்புயர்வற்றதும் உலகிலுள்ள பிறமொழிகளுக் கெல்லாம் வாயாத் தனிச்

சிறப்புள்ள பேரிலக்கணமாயுமுள்ளது ஒல் காப் பெருமைத் தொல்காப்பியமே. இத்துணை உயர்வுள்ள நூலின் பொருளதிகாரப் பகுதியை இற்றைக்கு ஐம்பது ஆண்டுகட்கு முன்னர் (1885) யாழ்ப்பாணம் ராவ்பகதூர் சி. வை. தாமோதரம் பிள்ளையவர்கள் பெரிதும் முயன்று பல தேசப் பிரதிரூபங்களைக் கொண்டு பரிசோதித்து முதன்



முதலில் அச்சிட்டுத் தமிழ்நாட்டுக்கு உட்கரித்தார்கள்.

இந்நன் முயற்சியில் இவர்கள் ஈடுபட்டபோழ்து ' நலம தொன் றடைதற் குறுமிடை யூறு நாதனே பலவுள வன்றே ' என்றபடி இவர்கட்கு நேர்ந்த இடர்கள்* பலப்பல. இவை ஒன்றுக்குஞ் சோர்வடையாமல் எடுத்த காரியத்தைத் திருவருட்டுணையானே முற்றுவித்த அருந்தமிழ்ப் பைங்கூழ் செழிக்கத் தோன்றிய செழுந்தமிழ்க் கொண்டல் திரு. தாமோதரம் பிள்ளையவர்கட்குத்

தமிழுலகம் எழுமையும் மறவா நன்றி செலுத்தப் பெரிதும் கடமைப்பட்டுள்ளது என்பது ஒருதலை. முப்பத்தொரு ஆண்டுகளுக்குப் பின்னர் (1916) திவான்பகதூர் ச. பவானந்தம் பிள்ளை அவர்கள் பொருளதிகாரப் பகுதியை இரண்டாவது பதிப்பாக அச் சிட்டு வெளியிட்டார்கள். இது மாணவர்கட்கும் பண்டிதர் கட்கும் அரிதிற் கிடைக்கக்கூடியதா யிருத்தல் பற்றி என் கெழுதகை நண்பரும் திருவையாறு அரசர் கல்லூரித் தலை மைத் தமிழ்ப்பண்டிதருமாகிய திரு. R. வேங்கடாசலம்

---

*இந்நூலைப் பரிசோதித்து அச்சிட முயன்றபின் தமிழ் நாடு களில் ஆங்காங்குத் தேடிப் பல பிரதிகள் சம்பாதிப்பது பெரும் பிர யாசையும் நெடுங்கால வேலையுமாயிற்று..........................பிரதி கிடைப்பதே மிக அருமையாகவுங் கிடைப்பினுங் குறைப்பிரதிகளாக வும் அவைதாமும் ஒரோவொருவரிக்குப் பலவழுவாக ஆயிரக்கணக் கான வழுஉடையனவாகவும் இருக்க,

அடியேன் அவ்வழுத்தொகை யைக் குறைத்து நூற்றுக்கணக்காக்கி விட்டதா என்மேற் குறையாயிற்று ............'விடியல் வெங்கதிரகாயும் வெயமலகறை' என்னும் வாக்கியத்தையும் ஓர் பரிபாடற் செய்யுளையுஞ் சரியாய்ப் பார்த்துணர் தற்கு எத்தனை பெயரிடங்கொண்டு திரிந்தேன் ? எத்தனை வித்து வான்களுக்குக் கடிதம் எழுதிக் கைசலித்தேன்.........(சி. வை. தா. பதிப்புரை).

vii

பிள்ளையவர்கள் அடியேனைத் தூண்டி, இச்சமயம் ஒருசுத்தப் பதிப்பு வெளிவரவேண்டிய ஆவசியகத்தை எடுத்து நன்கு புகட்டினர்கள். இம்மட்டோடு நில்லாமல், பொருளதிகாரத் தோடு ஏனைய பழந்தமிழ் நூல்களை ஒத்து நோக்கிக் கற்ப தற்கு (Comparative study)த்தகுந்த ஆராய்ச்சிக் குறிப் புக்களைச் சேர்ப்பதிலும் பிறநுட்பங்களை விளக்குவதிலும் வல்லுநரான மன்னார்குடி இயற்றமிழாசிரியர் திரு. ம. நா. சோமசுந்தரம் பிள்ளையவர்களை உதவி புரியுமாறுஞ்

செய்தனர். இவ்விருபெரியாருக்கும் எளியேனது உழுவலன்பு பாராட்டுங் கடப்பாடு பெரிதுமுடையது.

இந்நூல் அச்சுவாகன மேறுவதற்குமுன் தமக்குள்ள பலவேலைகட்கிடையே தமிழ் நலங்கருதி, கிடைத்த ஏட்டுப் பிரதியைக்கொண்டு மூலத்தையும் உரையையும் செப்பஞ் செய்து கொடுத்துதவிய சென்னைப்பல்கலைக் கழகத் தமிழக ராதிப் பதிப்பாசிரியர் திரு. S. வையாபுரிப்பிள்ளை B. A., B. L. அவர்கட்கு அடியேனது மனமார்ந்த நன்றி எஞ்ஞான்றும் உரியதாகுக. அச்சுத்தாள்களைப் பரிசோதித்துதவிய நண்பர்

கட்கும் இப்பதிப்பைச் செம்மையாகவும் திருத்தமாகவும் விரைவாகவும் அச்சிட்டுப் பண்படுத்தி உதவிபுரிந்த சாது அச்சுக்கூடத்தாருக்கும் நெஞ்சுகந்த நன்றி செலுத்துகின்றேன்.

இப்பதிப்பில், முந்தியபதிப்புக்களில் விளங்காமலிருந்த சிலமேற்கோள்கள் திருத்தமாகக் கிடைத்தவரை காட்டப் பட்டுள்ளன : சிற்றெட்டகம், அகத்திணை, பொருளியல் முதலிய சில புதிய மேற்கோள் விளக்கங்களுங் குறிக்கப்பட்டுள்ளன.

இரண்டாவது பாகமாகிய பேராசிரியம் பலதிருத்தங்க

ளுடனும் அரிய விளக்கக்குறிப்புக்களுடனும் எல்லாம் வல்ல இறைவன் இன்னருள் துணைகொண்டு விரைவில் வெளிவரும்.



இப்பெருந் தமிழ்த்தொண்டில் சிறியேனைப் புகுத்தி இதனை முற்றுவிக்கத் தோன்றாத் துணையாயிருந்து அருள் சுரந்து வரும் அசுரர்த்தடிந்து அமரர்க்காத்த ஆறுமுக குருபராம் அண்ணலார் திருவடிகளை மனமொழி மெய்களாற் றுதித்து இறைஞ்சுகின்றேன்.

சென்னை<br>பவஆண்டு ஐப்பசித் திங்கள்.

இங்ஙனம் :<br>S. கனகசபாபதி.

பொங்கும் மங்களம் எங்கும் தங்குக !

உ

## நூற்சுருக்க விளக்கம்

அக, அகம்

அறநெறி

இளம்

இறை, இறையனார்

எ - று

எ - ம்

ஐங், ஐங்குறு

ஐந். எழு

ஐந். ஐம்

கலி

களவழி

குறள்

குறிஞ்சி

குறு, குறுந்

கோவை, கோவையார் —
சிந்தா, சீவக —
காந்தருவ —
குண, குணமா, குணமாலை —
சுரமஞ்சரி —
நாம —
பதுமை —
முத்தி —
சில, சிலப் —
கானல் —
காடு, காடுகாண் —
மங்கல —
மனையறம் —

— அகநானூறு.

— அறநெறிச்சாரம்.

— இளம்பூரணருரை.

— இறையனாரகப்பொருள்.

— என்பது.

— எனவும்.

— ஐங்குறுநூறு.

— ஐந்திணையெழுபது.

— ஐந்திணையைம்பது.

— கலித்தொகை.

— களவழிநாற்பது.

— திருக்குறள்.

— குறிஞ்சிப்பாட்டு.

— குறுந்தொகை.

திருக்கோவையார்.

சீவகசிந்தாமணி.

காந்தருவதத்தையாரிலம்பகம்.

குணமாலையாரிலம்பகம்.

சுரமஞ்சரியாரிலம்பசம்.

நாமகளிலம்பகம்.

பதுமையாரிலம்பகம்.

முத்தியிலம்பகம்.

சிலப்பதிகாரம்.

கானல்வரி.
காடுகாண்காதை.
மங்கலவாழ்த்துக்காதை.
மனையறம்படுத்தகாதை.

X

சிறுபாண் —
சூ —
சொல் —
எச்ச —
கிளவி —
தகடூர் —
திணை. ஐம் —
திணைமாலை, திணைமாலைநூற்-

தேரே று —

தொல் —

அகத் —

கள, களவி, களவு —

புறத் —

மெய்ப் —

நச் —

நற் —

நாலடி —

நெடுநல் —

ப, பக் —

பட்டின, பட்டினப் —

பதிற்று, பதிற்றுப் —

பரி —

பழ —

பார —

பி - ம் —

பு - வெ, புற - வெ —

புறம் —

பெருங் —

பெரும்பாண் —

பெரும்பொருள் —

பேர், பேரா —

பொ, பொரு, பொருள் —

சிறுபாணாற்றுப்படை.

சூத்திரம்.

சொல்லதிகாரம்.

எச்சவியல்.

கிளவியாக்கம்.

தகடூர்யாத்திரை.

திணைமொழியைம்பது.

திணைமாலைநூற்றைம்பது.

தேரோறுபடலம்.

தொல்காப்பியம்.

அகத்திணையியல்.

களவியல்.

புறத்திணையியல்.
மெய்ப்பாட்டியல்.
நச்சினார்க்கினியருரை.
நற்றிணை.
நாலடியார்.
நெடுநல்வாடை.
பக்கம்.
பட்டினப்பாலை.
பதிற்றுப்பத்து.
பரிபாடல்.
பழமொழி.
பாரதம்.

பிரதிபேதம்.

புறப்பொருள் வெண்பாமாலை.

புறநானூறு.

பெருங்கதை.

பெரும்பாணாற்றுப்படை.

பெரும்பொருள்விளக்கம்.

பேராசிரியருரை.

பொருளதிகாரம்.



| | | |
|---|---|---|
| பொருந | — | பொருநராற்றுப்படை. |
| மதுரை | — | மதுரைக்காஞ்சி. |
| மலைபடு | — | மலைபடுகடாம். |
| மிதிலை | — | மிதிலைக்காட்சிப்படலம். |
| முத்தொள் | — | முத்தொள்ளாயிரம். |

முருகு — திருமுருகாற்றுப்படை.
முல்லை — முல்லைப்பாட்டு.
யா - வி — யாப்பருங்கலவிருத்தி.

( ) இங்ஙகவளைவிற் கண்ட எண்கள் பொருளதிகாரத் தொடர்ச் சூத்திர எண்கள் எனக்கொள்க.

[ ] இந்த வளைவிட்ட இடங்களிலுள்ள சொற்கள் சில பிரதி களிலில்லை; இச்சொற்களில்லாமலே பொருள் விளங்கக்கூடுமென் பதையுமறிக.

பதிப்பித்தபின்பு இடம் விளங்கிய

| மேற்கோள்கள் | பக்கம் | வரி | மேற்கோள் | |
|---|---|---|---|---|
| விளக்கம் | 200 | 5-6 | பொன்னன்ன...கோன் | |
| பதிற்று, 61. | | | | |
| | 201 | 13-17 | ஏற்றூர்தியானு... | |
| | | 19-23 | ..........பாற்று | |
| முத்தொள்ளாயிரம். | | | | |
| | 262 | 9-12 | குடியான்...மாங்கு | |
| | ,, | 32-33 | ஆருங்...சூழ்ந்து | |
| பெரும்பொருள் விளக்கம். | | | | |
| | 314 | 31 | வாதுவல்...வயிறே | தகடூர். |
| | 409 | 14-16 | இல்லுடை...மாதராயென | அகம் 230: 9-10. |

,, 30-33 கருங்கட...வெமக்கு ஐங் - ஐம்.
47. 468 , 11-14 முடமுதிர்...கிறத்து
ஐங் - எழு. 69.

---

சூத்திர முதற்குறிப்பகராதி

# சூத்திரம்

அகத்திணைமருங்

அசசமுமரா ணுமம

அடியோர்பாங்கி

அதுவேதானுமீரி

அந்தமில்சிறப்பி

அம்பலுமலரும்

அமரர்கண்முடியு

அயலோராயினும்

அருண்முந்துறுத்

அல்குறைவால்

அலரிற்றோன்றும்

அவற்றுணடுவெணை

அவற்றுளோதலுங்

அவன்குறிப்பறித

அவன்சோர்புகாத்

அவன்வரம்பிறத்த

அவனறிவாற்ற

அறக்கழிவுடைய
அறத்தொடுநிற்கு
அறுவகைப்பட்ட
அன்புதலைப்பிரிந்
அன்புறுதகுந
அன்பேயறனே
அன்னவகையான்
அன்னையென்னை

ஆங்காங்கொழுகு
ஆய்பெருஞ்சிறப்
ஆயர்வேட்டுவர்

ஆற்றதுபண்பும்

ஆறினதருமையும்
இசைதிரிந்திசைப்

இடித்துவரை

# சூத்திரம்

# எங்கிலமருங்கிற்

எல்லாவாயிலும்

எல்லாவுயிர்க்கும்

எளித்தலைத்தல்

ஏமப்பேரூர்

ஏவன்மாபினை

ஏறியமடற்றிறம்

ஏனைப்பிரிவு

ஏனை யுவமக்தா

ஏனோர்பாங்கினும்

ஒப்புமுருவும்

ஒருசிறைநெஞ்ச

ஒருதலையுரிமை

ஒருபாற்கிளவி

ஒன்றாத்தமரினும்

ஒன்றேவேறே

ஓதல்பகையே

கிணையும்வெலும்

காணத்தினமைந்

கலந்தபொழுதும்

கழிவினும்வரவி

களவலராயினும்

களவுங்கற்பும்

கற்புங்காமமும்
கற்புவழிப்பட்டவ
கற்பெனப்படுவது
கனவுமுரித்தால்
காஞ்சிதானே

காமக்கடப்பினுள்
காமக்கூட்டந்

காமஞ்சாலாவிள

காமஞ்சான்ற

காமஞ்சொல்லா

காமத்திணையில்

காமநிலையுரைத்த

காமப்பகுதி



| பக்கம் | சூத்திரம் | பக்சம |
|---|---|---|

# சூத்திரம்

தாய்க்கும்வரையா

தாய்போற்கழறி

தாயத்தினடையா

தாயறிவுறுதல்

தாவில்கொள்கை

தாவினல்லிசை

தானேசேறலும்

தானையானை

திணைமயக்குறுத

தும்பைதானே

துன்புறுபொழுதி

தெய்வமுறைவே

தேரும்யானையும்

தொல்லவையுரை

தோழிதாயே

தோழி தானே
தோழியின்முடியு
தோழியுள்ளுறுத்

நட்பினடக்கை

நடுவுநிலைத்திணை

நாட்டமிரண்டு

நாடகவழக்கினும்

நாற்றமுந்தோற்ற
நிகழ்தகைமருங்கி
னிகழ்ந்ததுகூறி
னிகழ்ந்ததுநினை
னிலம்பெயர்ந்து
னோயுமின்மும்
பகற்புணர்களனே
படையியங்கரவம்

பண்பிற்பெயர்ப்பி

பாத்தைமைமறுத்

பாத்தைவாயினல்

பண்ணாறுவகையி

பணியெதிர்பருவம்

பாங்கருஞ்சிறப்பி

# சூத்திரம்

முதலெனப்படுவது

முதலொடுபுணர்ந்

முந்நாளல்லது

முந்நீர்வழக்கம்

முயற்சிகாலத்

முழுமுதலாண

முறைப்பெயர்

முன்னிலைப்புற
முன்னிலையாக்கங்
முன்னையநான்கு
முன்னையமூன்று
மெய்தொட்டுபயி
மெய்ப்பெயர்மருங்
மேலோர்முறை

உ

பரமபதி துணை

# தொல்காப்பியம்

## பொருளதிகாரம்

நச்சினார்க்கினியம்

முதலாவது

### அகத்திணையியல்

**1.** கைக்கிளை முதலாப் பெருந்திணை யிறுவாய்
முற்படக் கிளந்த வெழுதிணை யென்ப.

என்பது சூத்திரம்.

நிறுத்த முறையானே பொருளினது இலக்கணம் உணர்த்தினமையின், இது பொருளதிகாரமென்னும் பெயர்த் தாயிற்று. இது நாண்மீனின் பெயர் நாளிற்குப் பெயராயி னாற்போல்வதோர் ஆகுபெயர்.

பொருளாவன:—அறம் பொருளின்பமும், அவற்றது நிலையின்மையும், அவற்றினீங்கிய வீடுபேறுமாம். பொரு ளெனப் பொதுப்படக் கூறவே, அவற்றின் பகுதியாகிய முதல் கரு உரியும், காட்சிப்பொருளும், கருத்துப்பொருளும், அவற்றின் பகுதியாகிய ஐம்பெரும் பூதமும், அவற்றின் பகுதியாகிய இயங்குதிணையும் நிலைத்திணையும், பிறவும் பொரு ளாம்.



எழுத்துஞ் சொல்லும் உணர்த்தி, அச்சொற்றொடர் கருவியாக உணரும் பொருள் உணர்த்தலின், மேலதிகாரத் தோடு இயைபுடைத்தாயிற்று. அகத்திணைக்கண் இன்பமும், புறத்திணைக்கண் ஒழிந்த மூன்று

பொருளும் உணர்த்துப. இது வழக்கு நூலாதலிற் பெரும்பான்மையும் நால்வகை·வரு ணத்தார்க்கும் உரிய இல்லறம் உணர்த்திப் பின் ·துறவறமுஞ் சிறுபான்மை கூறுப. அப்பொருள்கள் இவ்வதிகாரத்துட் காண்க. பிரிதனிமித்தங் கூறவே,. இன்ப நிலையின்மையுங் கூறிக் 'காமஞ்சான்ற' என்னுங் கற்பியற் சூத்திரத்தால் (192) துறவறமுங் கூறினர். வெட்சிமுதலா வாகையீறாக அறனும் பொருளும் பயக்கும் அரசியல் கூறி, அவற்றது நிலையின்மை காஞ்சியுட் கூறவே, அறனும் பொருளும் அவற்றது நிலை யின்மையுங் கூறினர். 'அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும்' என்னுஞ் சூத்திரத்தான் (75) இல்லறமுந் துறவறமுங் கூறி னர். இங்ஙனம் இந்நிலையாமையானும் பிறவற்றானும் வீட்டிற் குக் காரணங் கூறினர். இங்ஙனங் கூறவே, இவ்வாசிரியர் பெரி தும் பயன் றருவதோர் இலக்கணமே கூறினாராயிற்று: இதனாற் செய்த புலனெறி வழக்கினை யுணர்ந்தோர் இம்மை மறுமை வழுவாமற் செம்மை நெறியால் துறைபோவ ராதலின்.

இப்பொருளை எட்டுவகையான் ஆராய்ந்தாரென்ப: அவை அகத்திணை புறத்திணை என

இரண்டு திணை வகுத்து, அதன்கட் கைக்கிளைமுதற் பெருந்திணையிறுவா யேழும் வெட்சி முதற் பாடாண்டிணை யிறுவா யேழுமாகப் பதினான்கு பால் வகுத்து, ஆசிரியம் வஞ்சி வெண்பா கலி பரிபாடல் மருட்பா வென அறுவகைச் செய்யுள் வகுத்து, முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலென நால்வகை நிலன் இயற்றி, சிறுபொழு தாறும் பெரும்பொழு தாறுமாகப் பன்னிரண்டு காலம் வகுத்து, அகத்திணை வழுவேழும் புறத்திணை வழுவேழு மெனப் பதினான்கு வழு வமைத்து, நாடக வழக்கும் உலகியல் வழக்கு



மென இருவகை வழக்கு வகுத்து, வழக்கிடமுஞ் செய்யுளிடமு மென இரண்டு இடத்தான் ஆராய்ந்தாராதலின். எட்டிறந்த பல்வகையான் ஆராய்ந்தாரென்போர், முதல் கரு உரியும், திணைதொறு மரீஇய பெயரும், திணைநிலைப் பெயரும், இருவகைக் கைகோளும், பன்னிருவகைக் கூற்றும், பத்துவகைக் கேட்போரும், எட்டுவகை மெய்ப்பாடும், நால்வகை உவமமும், ஐவகை மரபும் என்பர்.

இனி,

இவ்வோத்து, அகத்திணைக்கெல்லாம் பொது இலக் கண

முணர்த்துதலின், அகத்திணையியலென்னும் பெயர்த் தாயிற்று. என்னை? எழுவகை அகத்திணையுள் உரிமைவகை யான் நிலம்பெறுவன இவையெனவும் அந்நிலத்திடைப் பொது வகையான் நிகழ்வன கைக்கிளை பெருந்திணை பாலை யெனவுங் கூறலானும், அவற்றுட் பாலைத்திணை நில வகையான் நடுவணதெனப்பட்டு நால்வகை யொழுக்கம் நிகழாநின்றுழி அந்நான்கனுள்ளும் பிரிதற்பொருட்டாய்த் தான் பொதுவாய் நிற்குமெனக் கூறலானும், முதல் கரு உரிப்பொருளும் உவமங் களும் மரபும் பொதுவகையாற் கூறப்படுதலானும், பிறவும் இன்னோரன்ன பொதுப் பொருண்மைகள் கூறலானு மென் பது. இங்ஙனம் ஓதிய அகத்திணைக்குச் சிறப்பிலக்கணம் ஏனை ஓத்துக்களாற் கூறுப.

ஒத்த அன்பான் ஒருவனும் ஒருத்தியுங் கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம், அக்கூட்டத்தின் பின்னர் அவ் விருவரும் ஒருவர்க்கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வா றிருந்ததெனக் கூறப்படாததாய், யாண்டும் உள்ளத்துணர்வே நுகர்ந்து இன்ப முறுவதோர் பொருளாதலின், அதனை அகம் என்றார். எனவே, அகத்தே நிகழ்கின்ற இன்பத்திற்கு அக மென்றது ஓர் ஆகுபெயராம்.

இதனை ஒழிந்தன, ஒத்த அன்புடையார்தாமே யன்றி எல்லார்க்குந் துய்த்துணரப் படுதலானும், இவை இவ்

வாறிருந்ததெனப் பிறர்க்குக் கூறப்படுதலானும், அவை புற

மெனவேபடும். இன்பமே யன்றித் துன்பமும் அகத்தே நிகழுமாலெனின், அதுவுங் காமங் கண்ணிற்றேல் இன்பத்துள் அடங்கும். ஒழிந்த துன்பம் புறத்தார்க்குப் புலனுகாமை மறைக்கப்படாமையிற் புறத்திணைப்பாலதாம். காம நிலையின்

மையான் வருந் துன்பமும் 'தாபதநிலை' 'தபுதாரநிலை' (79)

யென வேறும்.

திணையாவது ஒழுக்கம் ; இயல் - இலக்கணம் ; எனவே,

அகத்திணையியலென்றது இன்பமாகிய ஒழுக்கத்தினது இலக்கண மென்றவாறாயிற்று.

இவ்வோத்துக்கள் ஒன்றற்கொன்று இயைபுடைமை அவ்வவ் வோத்துக்களுட் கூறுதும்.

இனி, இச் சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், கூறக்

கருதிய பொருளெல்லாந் தொகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்:—கைக்கிளை முதலா-கைக்கிளை யெனப்பட்ட ஒழுக்கம் முதலாக, பெருந்திணை இறுவாய்-பெருந்திணை யென்னும் ஒழுக்கத்திணை இறுதியாகவுடைய எழுதிணையும்,

முற்படக் கிளந்த எழுதிணை என்ப - முற்படக் கூறப்பட்ட அகத்திணை யேழென்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

எனவே, பிற்படக் கூறப்பட்ட புறத்திணையும் எழுளவென்றவாறாயிற்று. எனவே, இப்பதினான்கு மல்லது வேறு பொருளின்றென வரையறுத்தா ராயிற்று. அகப்புறமும் அவைதம்முட் பகுதியாயிற்று. முதலும் ஈறுங் கூறித் திணையேழெனவே, 'நடுவணைந்திணை' உளவாதல் தும். அவை மேற் கூறுப.

பெறு

ஐைகக்கிளை யென்பது ஒருமருங்கு பற்றிய கேண்மை.
இஃது ஏழாவதன் தொகை. எனவே, ஒருதலைக் காமமாயிற்று.
எல்லாவற்றினும் பெரிதாகிய திணையாதலிற்
பெருந்திணை அகத். உ] அகத்திணையியல்
5

யாயிற்று. என்னை ? எண் வகை
மணத்தினுள்ளுங் கைக்
கிளைமுதல் ஆறு திணையும் நான்கு மணம்பெற, தாஞென்றுமே
நான்கு மணம்பெற்று நடத்தலின்.
பெருந்திணையிறுவாய்- பண்புத்தொகைப் புறத்துப்
பிறந்த அன்மொழித்தொகை.

முற்படக் கிளந்தவென எடுத்த லோசையாற்
கூறவே, பிற்படக் கிளந்த எழு திணை யுளவாயிற்று.
அவை வெட்சி,
வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி,
பாடாண்டிணை
எனவரும். 'ஒழிந்தோர்

பன்னிரண்டென்றாராதலிற் புறத் திணையேழென்ற தென்னையெனின், அகங்கை இரண்டுடை யார்க்குப் புறங்கை நான்காகாது இரண்டாயவாறுபோல, அகத்திணை யேழற்கும் புறத்திணை யேழென்றலே பொருத்த முடைத்தாயிற்று. எனவே, அகத்திணைக்குப் புறத்திணை அவ் வந் நிலத்து மக்கள் வகையாற் பிறந்த செய்கை வேற்றுமை யாதலின், ஒன்றொன்றற்கு இன்றியமையாவா றாயிற்று.

கரந்தை அவ் வேழற்கும் பொதுவாகிய வழுவாதலின், வேறு திணையாகாது.

எண்வகை மணனும் எதிர் சென்று கூறுவதாக லானுங், காமஞ் சாலா விளமைப் பருவம் அதன்கண்ணதாக லானுங் கைக்கிளையை முற்கூறினார்.

என்ப வென்றது அகத்தியனாரை. இக் குறியீடுகளும் அகத்தியனாரிட்டவென் றுணர்க. (க)

**2.** அவற்றுள்,

[1]நடுவ ணைந்திணை நடுவண தொழியப்
படுதிரை வையம் பாத்திய பண்பே.

இது முற்கூறிய ஏழனுள் தமக்கென நிலம் பெறுவன வும் நிலம் பெறாதனவுங் கூறுகின்றது.

[1]நக்கீரர் : இறை - உரை (பவா. பக். 26):—“தொல்காப்பியனுர் பாலைக்கு நிலம் வேண்டிற்றிலர். வேண்டாமையின் தெய்வமும் வேண் 6



இதன்பொருள்:—அவற்றுள்-முற்கூறிய எழு திணையுள், நடுவண் ஐந்திணை-கைக்கிளை பெருந்திணைக்கு நடுவுநின்ற ஐந் தொழுக்கத்திணை, படு திரை வையம் பாத்திய பண்பே-ஒலிக் குந் திரை சூழ்ந்த உலகிற்கு ஆசிரியன் பகுத்துக் கொடுத்த

டிற்றிலர். பிறர் பகவதியையும் ஆதித்தனையும் தெய்வமென்று வேண்டுவர்.”

இளம்பூரணர் : அகத். - 20, உரை :—“பாலைக்கு நிலம் ஓதாது வேனிற்காலமும் நண்பகலும் ஓதினமையானும், ‘முல்லையும் குறிஞ்சியும் முறைமையிற் றிரிந்து, நல்லியல் பழிந்து நடுங்குதுயருறுத்துப், பாலை யென்பதோர் படிவங் கொள்ளும்’ (சிலப் - காடுகாண், 64-66) எனப் பிற சான்றோர் செய்யுளகத்து வருதலானும், இந்நிலங்களில்

வேனிற்காலத்து நிகழ்வன கருப்பொருளாகக் கொள்ளப்படும்.
தெய்வம் - கொற்றவை."

பேராசிரியர்: கோவை-1, உரை:—"இதற்கு (கோங்கிற்கு) அடை கொடாதது...பாலைக்கு நிலமின்று ஆகலான்."

191, உரை:-"நானிலம் என்றார் பாலைக்கு நிலமின்று ஆகலான்."

நச்சினார்க்கினியர்: கலி - கடவுள்வாழ்த்து - உரை:—"நடுவணைந் 'திணை நடுவண தொழியப், படுதிரை வையம் பாத்திய பண்பே' என்றும், 'மாயோன் மேய காடுறை யுலகமும். ....... சொல்லிய முறை யாற் சொல்லவும் படுமே' என்றும், நிலம் நான்கேயாகக் கூறலின் பாலைக்கு நிலம் இன்றெனின், அற்றன்று. 'புணர்தல் பிரிதல் இருத்
தல் இரங்கல் - ஊடல் இவற்றின் நிமித்தம் என்றிவை - தேருங் காலைத்
திணைக்குரிப் பொருளே' என நால்வகை நிலத்தும் கொண்ட உரிப்
பொருட்கிடையே பிரிதலும் உரிப்பொருளாக ஆசிரியர் கொண்டார்; அப்பிரிவு நான்கு நிலத்திடையும் பொதுவாய் மயங்கிவருமென்று
கருதி. ஆதலான் ஈண்டுப் பாலைத்திணையையும் திணையாக ஆசிரியர்
நல்லந்துவனார் கோத்தாரென்று கூறுக.

"ஆயின் 'கைக்கிளை முதலாப் பெருந்திணை யிறுவாய்...என்ப'
என்றலின் கைக்கிளையும் பெருந்திணையும் கோத்தல் வேண்டு
மெனின், அஃது 'உரிப்பொரு ளல்லன மயங்கவும் பெறுமே' என்
பதனுல் அவை உரிப்பொருளன்மையின் நால்வகை நிலத்தினும்
மயங்கி வரப்பெறும் என்றார்."



இலக்கணத்தை, நடுவணது ஒழிய-நடுவணதாகிய பாலையை அவ்வுலகம்
பெருதே நிற்கும்படியாகச் செய்தார் என்றவாறு.

எனவே, யானும் அவ்வாறே நூல் செய்வ லென்றார்.

உலகத்தைப் படைக்கின்ற காலத்துக் காடும் மலையும் நாடுங் கடற்கரையுமாகப் படைத்த நால்வகை நிலத்திற்கு ஆசிரியன்தான் படைத்த ஐவகை ஒழுக்கத்திற் பாலை யொழிந்

பொருந - 226, உரை - “ நானுடு என்றார், ‘ நடுவணைந்திணை நடு வண தொழிய ’ என்னும் சூத்திரத்தால்.”

**சிவஞானமுனிவர்** : முதற்சூத்திர விருத்தி (பக். 36) :—“அற் றேல் அஃதங்ஙனமாக; பாலைத்திணை நடுவுநிலைத்திணை யென்று ஆயவாறென்னையெனின் கூறுதும்: ஆசிரியர் (தொல்காப்பியனார்) யாதானுமோர் காரணம் பற்றியே குறியிட்டாருவதல்லது வட நூலார்போலக் காரணம் பற்றதும் குறியிட்டாருதல் யாண்டு மின்மையானும், ஆட்சி நோக்கிய குறியெனின் குறியீடெல்லாம் ஆட்சிப்பொருட்டே யாகலின் ஆட்சி நோக்கிக் குறியீடு, குறியீடு நோக்கி ஆட்சியென ‘ஒன்றனையொன்று பற்றுதல்’ என்னும் குற்ற மாகலின், ஆட்சி நோக்கிய குறியென்பது பொருந்தாமையானும், ‘ நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு - முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே’ என்புழி நடுவுநிலைத்திணை யென்னும் சொல்லே தன் காரணம் இனிது விளக்கி நிற்றலானும், அது நடுவு

நிற்றல் காரணத்தால் பெற்ற பெயரேன்பது பெற்றம். ஏனை நாற் றிணையும் முறையானே கூறி இறுதிக்கண் ஓதுதலான் இஃது அவற்றின் வேறென்பது விளங்குதலானும், எஞ்சி நின்றது பாலையே யாகலானும், புறப்பொருள் கூறுங்கால், 'வாகை தானே பாலையது புறனே' என நடுவுநிலைத்திணை கூறுந் தானத்திற் பாலையெனக் குறியிட்டாளுதலானும், பாலைத்திணை நடுவுநிலைத்திணை யென்பன ஒருபொருட் கிளவி யென்பதூஉம் பெறப்பட்டது. படவே, அஃது எவற்றின் நடுவுநிற்பதென்று அவாவுங்கால், எண்ணு முறைக்கண் நடுவுநிற்பதென்றல் பொருந்தாது: முதற்பொருண் முறைபற்றி முல்லை முதலாகவைத் தெண்ணினர், உரிப்பொருண் முறைபற்றியும் புறப்பொருண் முறைபற்றியும் குறிஞ்சி முதலாக வைத்து எண்ணப்



தனவற்றைப் பகுத்துக் கொடுத்தான்: அப்பாலை ஏனையபோல ஒருபாற் படாது நால்வகை நிலத்திற்கும் உரியவாகப் புல னெறிவழக்கஞ்செய்து வருதல்பற்றி. பாலைக்கு நடுவண

தென்னும் பெயர் ஆட்சியுங் குணனுங் காரணமாகப் பெற்ற பெயர். 'நடுவுநிலைத்திணையே நண்பகல் வேனில்' (9) என ஆள்ப. புணர்தல், இருத்தல், இரங்கல், ஊடல் என்பவற் றிற்கு இடையே பிரிவு நிகழ்தலானும், நால்வகை யுலகத்திற்

கிடையிடையே,

"முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து
நல்லியல் பழிந்து நடுங்குதுய ருறுத்துப்
பாலை யென்பதோர் படிவங்கொள்ளும்" (சிலப். காடு 64-66.)

என முதற்பொருள்பற்றிப் பாலை நிகழ்தலானும், நடுவண தாகிய நண்பகற்காலந் தனக்குக் காலமாகலானும், புணர்தற்

---

படும். அம்முக்கூற்று எண்ணுமுறைமையினும் பாலைத்திணை நடுவு நிற்பதன்றாகலின். இனி ஏனை நால்வகை உரிப்பொருள்களினும் இடையிடையே பிரிவு நிகழ்தலின் அதுபற்றி நடுவுநிலைத்திணை யென்றாரெனின், புணர்ச்சியும் அவ்வாறு இடையிடை நிகழ்தல் பற்றிக் குறிஞ்சியும் நடுவுநிலைத்திணையெனல் வேண்டும் ஆகலானும், நடுவணதாகிய நண்பகற்காலம் தனக்குக் காலமாதல்பற்றி அங்ஙனங்

கூறினாரெனின், நடுவணதாகிய இடையாமம் தனக்குக் காலமாதல் பற்றிக் குறிஞ்சியும் அவ்வாறு கூறப்படுமாகலானும்...உலகியற் பொருளாகிய அறம்பொருளின்பங்களுள் நடுவணதாகிய பொருட்குத் தான் காரணமாதல்பற்றி அங்ஙனம் கூறினாரெனின், பரத்தையிற் பிரிவு ஓதற்பிரிவு போல்வன ஏனையவற்றிற்குங் காரணமாகலின் பொருண்மாத்திரைக்கே காரணமென்பது படாமையானும், அங்ங

னம் உரைப்பனவெல்லாம் போலியென்றொழிக.

“மற்றென்னையோ காரணம்பற்றிக் குறியிட்டவாறெனின், ‘நடுவணைந்திணை நடுவண தொழியப் - படுதிரை வையம் பாத்திய பண்பே’ என நிலம் பகுத்தோதுங்கால் ‘நடுவணது’ எனக் குறியிட்டாராகலின், அங்ஙனம் பகுக்கப்படும் நிலங்களுமாகாது அவற்



கும் இருத்தற்கும் இடையே பிரிவு வைத்தலானும், உலகியற் பொருளாகிய அறம்பொருளின்பங்களுள் நடுவணதாய பொருட்குத் தான் காரணமாகலானும், நடுவணதெனக் குணங் காரணமாயிற்று.

பாயிரத்துள் எல்லை கூறியதன்றி ஈண்டும் எல்லை கூறினார், புறநாட்டிருந்து தமிழ்ச்செய்யுள் செய்வார்க்கும் இதுவே இலக்கணமா மென்றற்கு.

இவ்விலக்கணம் மக்கள் நுதலிய அகனைந்திணைக்கே யாதலின், இன்பமே நிகழுந் தேவர்க்காகா.

‘காமப் பகுதி கடவுளும் வரையார்’ (தொல். பொருள் 83.)

என்பது புறம்.

நடுவணாற்றிணை யென்னாது ஐந்திணை யென்றார், பாலை யும் அவற்றோ டொப்பச் சேறற்கு. இத்திணையை மூன்றாக மேற் பகுப்பார். (உ)

**3.** முதல்கரு வுரிப்பொரு ளென்ற மூன்றே
நுவலுங் காலை முறைசிறந் தனவே
பாடலுட் பயின்றவை நாடுங் காலை.

இது நடுவணைந்திணையைப் பகுக்கின்றது.

---

றின் வேறுமாகாது தனக்குரிய நிலம் நடுநிகர்த்ததாய் நிற்றல்பற்றி நடுவுநிலைத்திணையெனக் குறியிட்டானுதலே ஆசிரியர் கருத்தென்க.

அங்ஙனமாதல் ' முல்லையும் குறிஞ்சியும் முறைமையிற் றிரிந்து - நல்லியல் பழிந்து நடுங்குதுய ருறுத்துப் - பாலை யென்பதோர் படிவங் கொள்ளும் ' என்பதனாலும் உணர்க. இங்ஙனம் குறியிட்டமையிற் பாலைக்கு நிலம் உண்டென்பதூஉம், அதனை யேனை நிலங்களின் வேறாக வைத்துப் பகுத்தெண்ணுதல் மரபன்றென்பதூஉம், ஆசிரியர் கருத்தாதல் உணர்ந்துகொள்க. இவ்வுண்மை உணராதார் (நாற்கவி ராச நம்பி, வைத்தியநாத தேசிகர்) பாலை சான்ற சுரம் நானிலத்துள் அடங்காதென வேறுவைத்தெண்ணி, ஆசிரியரொடு மாறுகொண்டு,

நிலைமைக்கேற்பத் தமக்கு வேண்டியவாறே கூறுப."



இதன் பொருள்:—பாடலுள் பயின்றவை நாடுங் காலை- புலனெறி வழக்கிடைப் பயின்ற பொருட்களை ஆராயுங் காலத்து, முதல் கரு உரிப்பொருள் என்ற மூன்றே-முதலுங் கருவும் உரிப்பொருளும் என்ற மூன்றேயாம்: நுவலுங் காலை முறை சிறந்தனவே-அவை தாம் செய்யுட் செய்யுங்கால் ஒன்று ஒன்றனிற் சிறந்து வருதலுடைய என்றவாறு.

இங்ஙனம் பாடலுட் பயின்ற பொருள் மூன்றெனவே, இம் மூன்றும் புறத்திணைக்கும் உரியவென்பதும் பெறுதும். அது புறத்திணைச் சூத்திரங்களுள், 'வெட்சிதானே குறிஞ்சி யது புறனே' (56) என்பன முதலியவற்றாற் கூறுப.

முதலிற் கருவும், கருவில் உரிப்பொருளுஞ் சிறந்து வரும். இம்மூன்றும் பாடலுட் பயின்று வருமெனவே வழக்கினுள் வேறுவேறு வருவதன்றி ஒருங்கு நிகழாவென் பதூஉம், நாடுங்காலை யெனவே புலனெறிவழக்கிற் பயின்ற வாற்றான் இம்மூன்றனையும் வரையறுத்துக் கூறுவதன்றி வழக்கு நோக்கி இலக்கணங் கூறப்படாதென்பதூஉம் பெறுதும் : 'நல்லுலகத்து, வழக்குஞ் செய்யுளு மாயிரு முதலின்' (தொல். பாயிரம்) என்று புகுந்தமையிற் பொருளும் அவ் விரண்டினானும் ஆராய்தல் வேண்டுதலின்.

இஃது இல்லதெனப்படாது, உலகியலேயாம். உலகிய லின்றேல், ஆகாயப்பூ நாறிற்றென்றவழி அது சூடக் கருது வாருமின்றி மயங்கக் கூறினானென்று உலகம் இழித்திடப் படுதலின் இதுவும் இழித்திடப்படும். இச் செய்யுள் வழக் கினை நாடகவழக்கென மேற்கூறினர், எவ்விடத்தும் எக்காலத் தும் ஒப்பநிகழும் உலகியல் போலாது, உள்ளோன் தலைவனாக இல்லது புணர்த்தன் முதலாகப் புனைந்துரைவகையாற் கூறும் நாடக விலக்கணம்போல யாதானு

மொரோவழி ஒரு சாரார்
மாட்டு உலகியலான் நிகழும் ஒழுக்கத்தினை எல்லார்க்கும்
பொதுவாக்கி இடமுங் காலமும் நியமித்துச்



தல் ஒப்புமை நோக்கி. மற்று இல்லோன் தலைவனாக இல்லது புணர்க்கும் நாடகவழக்குப்போல ஈண்டுக் கொள்ளாமை, ' நாடக வழக்கு ' என்னுஞ் சூத்திரத்துட் (53) கூறுதும்.

" கணங்கொ ளருவிக் கான்கெழு நாடன்
குறும்பொறை நாட னல்வய லூரன்
தெண்கடற் சேர்ப்பன் பிரிந்தெனப் பண்டையிற்
கடும்பகல் வருதி கையறு மாலை
கொடுங்கழி நெய்தலுங் கூம்புங்
காலை வரினுங் களைஞரோ விலரே "
(ஐங்குறு - 183)

என இவ் வைங்குறுநூற்றுள் இடம் நியமித்துக்கூறியது செய்யுள் வழக்கு.

இனி, அவை முறையே சிறந்து வருமாறு :—

" முல்லை வைந்நுனை தோன்ற வில்லமொடு

பைங்காற் கொன்றை மென்பிணி யவிழ
இரும்புதிரித் தன்ன மாயிரு மருப்பிற்
பரலவ லடைய விரலை தெறிப்ப
மலர்ந்த ஞாலம் புலம்புபுறங் கொடுப்பக்
கருவி வானங் கதழுறை சிதறிக்
கார்செய் தன்றே கவின்பெறு கானங்
குரங்குளைப் பொலிந்த கொய்சுவற் புரவி
நரம்பார்ப் பன்ன வாங்குவள் பரியப்
பூத்த பொங்கர்த் துணையொடு வதிந்த
தாதுண் பறவை பேதுற லஞ்சி
மணிநா வார்த்த மாண்வினைத் தேரி
னுதுக்காண் டோன்றுங் குறும்பொறை நாடன்
கறங்கிசை விழவி னுறந்தைக் குணாது
நெடும்பெருங் குன்றத் தமன்ற காந்தட்
போதவி ழலரி நாறு
மாய்தொடி யரிவைநின் மாணலம் படர்ந்தே" (அகம் - 4.)

இது குறித்த காலம் வந்தது, அவரும் வந்தாரென ஆற்றுவித்தது.

இக்களிற்றியானைநிரையுள், முல்லைக்கு முதலுங் கரு . வும் வந்து உரிப்பொருளாற் சிறப்பெய்தி முடிந்தது.

" இளைபா ராட்டுங் கடுநடை வயக்களிறு
முளைதரு பூட்டி வேண்டுகுள கருத்த
வாணிற வுருவி னொளிறுபு மின்னிப்
பரூஉவுறைப் பஃறுளி சிதறி வானவின்று
பெருவரை நளிர்சிமை யதிர வட்டித்துப்
புயலே றுரைஇய வியலிரு ணடுநாள்
விறலிழைப் பொலிந்த காண்பின் சாயற்
றடைஇத் திரண்டநின் றோள்சேர் பல்லதைப்
படாஅ வாகுமெங் கண்ணென நீயு
மிருண்மயங் கியாமத் தியவுக்கெட விலங்கி
வரிவயங் கிரும்புலி வழங்குநாப் பார்க்கும்
பெருமலை விடரகம் வரவரி தென்னாய்
வரலெளி தாக வெண்ணுதி யதனா
னுண்ணிதிற் கூட்டிய படுமா ணாரந்
தண்ணிது கமழு நின்மார் பொருநா
ளடைய முயங்கே மாயின் யாமும்
விறலிழை நெகிழச் சாஅய்து மதுவே
யன்னை யறியினு மறிக வலர்வா
யம்பன் மூதூர் கேட்பினுங் கேட்க
வண்டிறை கொண்ட வெரிமரு டோன்றியொ

டொண்பூ வேங்கை கமழுந்
தண்பெருஞ் சாரற் பகல்வந் தீமே." (அகம் - 218.)

இஃது இடத்துய்த்துப் பகற்குறி நேர்ந்த வாய்ப்பாட் டான் வரைவுகடாயது.

இம் மணிமிடைபவளத்துள், குறிஞ்சிக்கு முதலுங் கரு .வும் வந்து உரிப்பொருளாற் சிறப்பெய்தி முடிந்தது.

"வண்டுபடத் ததைந்த கண்ணி யொண்கழ
லுருவக் குதிரை மழவ ரோட்டிய



முருக னற்போர் நெடுவே ளாவி
யறுகோட் டியானைப் பொதினி யாங்கட்
சிறுகா ரோடன் பயினொடு சேர்த்திய
கற்போற் பிரியல மென்ற சொற்று
மறந்தனர் கொல்லோ தோழி சிறந்த
வேய்மருள் பணைத்தோண் ஞெகிழச் சேய்நாட்டுப்

பொலங்கல வெறுக்கை தருமார் நிலம்பக
வழல்போல் வெங்கதிர் பைதறத் தெறுதலி
னிழறேய்ந் துலறிய மாத்த வறைகாய்
பறுநீர்ப் பைஞ்சுனை யாமறப் புலர்தலி
னுகுநெற் பொரியும் வெம்மைய யாவரும்
வழங்குந ரின்மையின் வெளவுநர் மடியச்
சுரம்புல் லென்ற வாற்ற வலங்குசினை
நாரின் முருங்கை நவிரல் வான்பூச்
சூரலங் கடுவளி யெடுப்ப வாருற்
றுடைதிரைப் பிதிர்விற் பொங்கிமுன்
கடல்போ றோன்றல காடிறந் தோரே." (அகம் - 1.)

இது பிரிவிடையாற்றாது தோழிக்குக் கூறியது.

இக் களிற்றியானை நிரையுள், பாலைக்கு முதலும் கருவும் வந்து உரிப்பொருளாற் சிறப்பெய்தி முடிந்தது.

"சேற்றுநிலை முனைஇய செங்கட் காரா
னூர்மடி கங்குலி னோன்றளை பரிந்து
கூர்முள் வேலி கோட்டி னீக்கி
நீர்முதிர் பழனத்து மீனுட னிரிய
வந்தூம்பு வள்ளை மயக்கித் தாமரை
வண்டூது பனிமல ராரு மூர

யாரை யோகிற் புலக்கேம் வாருற்
றுறையிறந் [1]தொளிருந் தாழிருங் கூந்தற்
பிறளு மொருத்தியை யெம்மனைத் தந்து

---

(பி - ம்)—[1]தொளிர்வருந்.



வதுவை யயர்ந்தனை யென்ப வஃதியாங்
கூறேம் வாழிய ரெந்தை செறுநர்
களிறுடை யிருஞ்சமந் ததைய நூறு
மொளிறுவாட் டானைக் கொற்கைச் செழியன்
பிண்ட நெல்லி னள்ளூ ரன்னவெம்
மொண்டொடி நெகிழினு நெகிழ்க
சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரோ." (அகம் - 46.)

இது வாயின் மறுத்தது.

இக் களிற்றியானை நிரையுள், மருதத்திற்கு முதலுங் கருவும் வந்து உரிப்பொருளாற் சிறப்பெய்தி முடிந்தது. 'வண்டூது பனிமலர்' எனவே வைகறையும் வந்தது.

" கானன் மாலைக் கழிப்பூக் கூம்ப
நீனிறப் பெருங்கடல் பாடெழுந் தொலிப்ப

மீனார் குருகின் மென்பறைத் தொழுதி
குவையிரும் புன்னைக் குடம்பை சேர
வசைவண் டார்க்கு மல்குறு காலைத்
தாழை தளரத் தூக்கி மாலை
யழிதக வந்த கொண்டலொடு கழிபடர்க்
காமர் நெஞ்சங் கையறு பினையத்
துயரஞ் செய்தநம் மருளா ராயினு
மறாஅ லியரோ வவருடைக் கேண்மை
யளியின் மையி னவணுறைவு முனைஇ
வாரற்க தில்ல தோழி கழனி
வெண்ணெல் லரிஞர் பின்றைத் ததும்புந்
தண்ணுமை வெரீஇய தடந்தா ளாரை
செறிமடை வயிரிற் பிரற்றிப் பெண்ணை
யகமடற் சேக்குந் துறைவ
னின்றுயின் மார்பிற் சென்றவென்
னெஞ்சே." (அகம் - 40.)

இது பொருட்பிரிவிடைத் தோழிக்கு உரைத்தது.

இக் களிற்றியானை நிரையுள், நெய்தற்கு முதலுங் கருவும் வந்து உரிப்பொருளாற் சிறப்பெய்தி முடிந்தது.

இச்சிறப்பானே முதலின்றிக் கருவும் உரிப்பொருளும் பெறுவனவும், முதலுங் கருவுமின்றி உரிப்பொருளே பெறு வனவுங் கொள்க.

" திருநகர் விளங்கு மாசில் கற்பி
னரிமதர் மழைக்கண் மாஅ யோளொடு
நின்னுடைக் கேண்மை யெவனே முல்லை
யிரும்பல் கூந்த ஞற்றமு
முருந்தேர் வெண்ப [1]வொளியுநீ பெறவே."

இது பொருள்வயிற் பிரிந்தோன் சுரத்து நினைந்து உரைத்தது.

இது முதற்பொருளின்றி வந்த முல்லை.

" காந்தை விரைஇய தண்ணறுங் கண்ணி
யிளைய ரேவ வியங்குபரி கடைஇப்
பகைமுனை வலிக்குந் தேரொடு
வினைமுடித் தனர்நங் காத லோரே."

இது வந்தாரென் றுற்றுவித்தது.

இது முதலுங் கருவுமின்றி வந்த முல்லை.

" நறைபரந்த சாந்த மறவெறிந்து நாளா

லுறையெதிர்ந்து வித்தியவூ ழேனற்-பிறையெதிர்ந்த
தாமரை போன்முகத்துத் தாழ்குழலீர் காணீரோ
வேமரை போந்தன வீண்டு.'' (திணைமாலை - 1.)

இது மதியுடம்படுத்தது.
இது முதற்பொருளின்றி வந்த குறிஞ்சி.

“ முதுக்குறைந் தனளே முதுக்குறைந் தனளே
மலைய னொள்வேற் கண்ணி
முலையும் வாரா முதுக்குறைந் தனளே.''

(பி - ம்.)—[1]னகையுநீ.



இஃது இளையள் விளைவிலளென்றது. முதலுங் கருவு மின்றி வந்த குறிஞ்சி.

இது நாணநாட்டம்.

“ நாளு நாளு மாள்வினை யழுங்க
வில்லிருந்து மகிழ்வோர்க் கில்லையாற் புகழென
வொண்பொருட் ககல்வர்நங் காதலர்
கண்பனி துடையினித் தோழி

நீயே." [சிற்றெட்டகம்]

இது வற்புறுத்தாற்றியது.

இஃது உரிப்பொருளொன்றுமே வந்த பாலை.

"பூங்கொடி மருங்கி னெங்கை கேண்மை
முன்னும் பின்னு மாகி
யின்னும் பாண னெம்வயி னனே."

இது வாயின் மறுத்தது.

இஃது உரிப்பொருளொன்றுமே வந்த மருதம்.

"அங்கண் மதிய மரவின்வாய்ப் பட்டெனப்
பூசல் வாயாப் புலம்புமனைக் கலங்கி
யேதின் மாக்களு நோவர் தோழி
யென்று நோவா ரில்லைத்
தெண்கடற் சேர்ப்ப னுண்டவென் னலக்கே."

இது கழிபடர்.

இது பெயரானும் உரிப்பொருளானும் நெய்தலாயிற்று.

இங்ஙனங் கூறவே உரிப்பொருளின்றேற் பொருட் பயமின்றென்பது பெற்றும். இதனானே முதல் கரு வுரிப்பொருள் கொண்டே வருவது திணையாயிற்று.

இவை, பாட லுட் பயின்ற வழக்கே

இலக்கணமாதலின், இயற்கையாம். அல்லாத சிறுபான்மை வழக்கினைச் செயற்கையென மேற் பகுப்பர்.



**4.** முதலெனப் படுவது நிலம்பொழு திரண்டி
னியல்பென மொழிப வியல்புணர்ந்
தோரே.

இது நிறுத்தமுறையானே முதல்

உணர்த்துவான் அதன் பகுதியும் அவற்றுட் சிறப்புடையனவும் இல்லனவுங் கூறுகின்றது.

இதன் பொருள் :—முதல் எனப்படுவது - முதலென்று சிறப்பித்துக் கூறப்படுவது, நிலம் பொழுது இரண்டின் இயல்பு என மொழிப-நிலனும் பொழுதும் என்னும் இரண்டினது இயற்கை நிலனும் இயற்கைப் பொழுதுமென்று கூறுப, இயல்பு உணர்ந்தோரே - இடமுங் காலமும் இயல்பாக உணர்ந்த ஆசிரியர் என்றவாறு.

இயற்கையெனவே செயற்கை நிலனுஞ்

செயற்கைப் பொழுதும் உளவாயிற்று. மேற் ' பாத்திய ' (2) நான்கு நில னும் இயற்கை நிலனும்.ஐந்திணைக்கு வகுத்த பொழுதெல்லாம் இயற்கையாம்; செயற்கை நிலனும் பொழுதும் முன்னர் அறியப்படும். முதல் இயற்கைய வென்றதனாற் கருப் பொருளும் உரிப்பொருளும் இயற்கையுஞ் செயற்கையுமாகிய சிறப்புஞ் சிறப்பின்மையும் உடையவாய்ச் சிறுவரவினவென மயக்கவகையாற் கூறுமாறு மேலே கொள்க. இனி நிலத் தொடு காலத்தினையும் முதலென்றலிற் காலம்பெற்று நிலம் பெறாத பாலைக்கும் அக்காலமே முதலாக அக்காலத்து நிக ழும் கருப்பொருளுங் கொள்க. அது முன்னர்க் காட்டிய உதாரணத்துட் காண்க. (ச)

5. மாயோன் மேய காடுறை யுலகமுஞ்
சேயோன் மேய மைவரை யுலகமும்
வேந்தன் மேய தீம்புன லுலகமும்
வருணன் மேய பெருமண லுலகமும் 18

2

முல்லை குறிஞ்சி மருத நெய்தலெனச்
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே.

இது 'நடுவணது' (2) ஒழிந்த நான்காநும் அவ் 'வைய' த்
தைப் பகுக்கின்றது.

இதன்பொருள்:—மாயோன் மேய காடு உறை உலகமும்- கடல் வண்ணன் காதலித்த காடுறையுலகமும், சேயோன் மேய மை வரை உலகமும் - செங்கேழ் முருகன் காதலித்த
வான் தங்கிய வரைசூழுலகமும், வேந்தன் மேய தீம் புனல் உலகமும் - இந்திரன் காதலித்த தண்புன னாடும், வருணன் மேய பெரு மணல் உலகமும் - கருங்கடற் கடவுள் காதலித்த நெடுங்கோட் டெக்கர் நிலனும், முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச் சொல்லிய முறையால் சொல்லவும்படுமே - முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலென ஒழுக்கங் கூறிய முறை யானே சொல்லவும்படும் என்றவாறு.[1]

---

[1]பரிமேலழகர்-பரி. 3 - உரை :—" மூவேழுலகு ஆவன : மேலே
ழும் கீழேழும் நடு சம்புத்தீவு முதலிய தீவேழும் என்பது பெற்றும். தொல்காப்பியனாரும் 'மாயோன் மேய காடுறை யுலகமும் - - சேயோன் மேய மைவரை யுலகமும்' என இவ்வுலகினுட் பாகுபாடு
களையும் உலகென்றார்."

அடியார்க்கு நல்லார் - சிலப். பதிகம் - உரை :—" 'சொல்லிய

முறையாற் சொல்லவும் படும் ' என்பதனல் சொல்லாத முறையாற்

சொல்லவும் படுமென அருத்தாபத்தி கோடலானும் ' நடுவுநிலைத்

திணையே நண்பகல் வேனிலொடு, முடிவுநிலை மருங்கின் முன்னிய

நெறித்தே ' என்பதனுனும் ' முல்லையும் குறிஞ்சியும் முறைமையிற்

றிரிந்து - நல்லியல் பழிந்து நடுங்குதுய ருறுத்துப் - பாலை யென்ப

தோர் படிவங்கொள்ளும்-காலை யெய்தினிர்' என்பதனுனும், போந்த

இப்பெற்றித்தாகிய பாலைத்திணை நிலமுதற்பொருள்."

நச்சினர்க்கினியர் - சிந்தா - முத்தி. 8 - உரை:—"உலகென்னும்

சொல் மண்ணுலக முழுதுமேயன்றித் தன்கட் கூறபட்ட நிலங்களையும் உணர்த்துமென்பது ' மாயோன் மேய காடுறை யுலகமும் ' என்னும் சூத்திரத்தான் உணர்க."



இந்நான்கு பெயரும் எண்ணும்மையோடு நின்று

எழுவா யாகி, 'சொல்லவும்படும்' என்னுந் தொழிற்பயனிலை கொண் டன. என்றது இவ்வொழுக்கம் நான்கானும். அந்நான்கு நிலத்தையும் நிரனிறை வகையாற் பெயர் கூறப்படுமென்ற வாறு. எனவே, ஒழுக்கம் நிகழ்தற்கு நிலம் இடனாயிற்று.

உம்மை எதிர்மறையாகலின், இம்முறையன்றிச் சொல்லவும்படுமென்பது பொருளாயிற்று. அது தொகைகளினுங் கீழ்க்கணக்குக்களினும் இம்முறை மயங்கிவரக் கோத்தவாறு காண்க.

முல்லை நிலத்துக் கோவலர், பல்லா பயன் தருதற்கு மாயோன் ஆகுதி பயக்கும் ஆபல காக்கவெனக் குரவை தழீஇ மடைபல கொடுத்தலின் ஆண்டு அவன் வெளிப்படு மென்றார்.

உதாரணம் :—' அரைசுபடக் கடந்தட்டு ' என்னு முல் லைக்கலியுள்,

"பாடிமிழ் பரப்பகத் தரவணை யசைஇய
வாடுகொ ணேமியாற் பரவுதும்" (கலி-105.)

எனவரும்.

" படையிடுவான் மற்கண்டீர் காமன் மடையடும்
பாலொடு கோட்டம் புகின்'' (கலி-109.)

என அவன்
மகனாகிய காமனும் அந்நிலத்திற்குத் தெய்வ மாதல் '
அவ்வகை பிறவுங் கருவென மொழிப' (18) என்
புழி வகை யென்றதனாற் கொள்க.

இனி, குறிஞ்சி நிலத்திற்குக் குறவர் முதலியோர் குழீஇ வெறியயர்தற்கு வேண்டும் பொருள்கொண்டு வெறியயர்ப வாகலின், ஆண்டு முருகன் வெளிப்படுமென்றார்.



அது, 'அணங்குடை நெடுவரை' என்னும் அகப்பாட்டி
னுள,

"படியோர்த் தேய்த்த பல்புகழ்த் தடக்கை
நெடுவேட் பேணத் தணிகுவ ளிவள்" (அகம்-22.)

எனவரும். [1]"சூரர மகளிரொ டுற்ற சூளே' என் புழிச் சூரரமகளிர் அதன் வகை.

இனி ஊடலுங் கூடலுமாகிய காமச்சிறப்பு நிகழ்தற்கு மருத நிலத்திற்குத் தெய்வமாக 'ஆடலும் பாடலு மூடலு முணர்தலும்' உள்ளிட்ட இன்பவிளையாட்டு இனிது நுகரும் இமையோர்க்கும் இன்சுரலெழிலிக்கும் இறைவனாகிய இந்திரனை ஆண்டையோர் விழவுசெய்து அழைத்தலின் அவன் வெளிப்படுமென்றார்.

அது,

"வையைப் புதுப்புன லாடத் தவிர்ந்தமை
தெய்வத்திற் றேற்றித் தெளிக்கு" (கலி-98.)

என இந்திரனைத் தெய்வமென்றதனானும், [2]இந்திர விழவூரெடுத்த காதையானும் உணர்க.

இனி நெய்தனிலத்தில் நுளையர்க்கு வலைவளந் தப்பின் அம்மகளிர் கிளையுடன் குழீஇச் சுறவுக் கோடு நட்டுப் பரவுக் கடன் கொடுத்தலின், ஆண்டு வருணன் வெளிப்படு மென் றார்.

அவை,

"சினைச்சுறவின் கோடுநட்டு
மனைச்சேர்த்திய வல்லணங்கினன்" (பட்டின - 86

- 87.)

எனவும்,

"கொடுஞ்சுழிப் புகாஅர்த் தெய்வ நோக்கி"

(அகம்-110.)

எனவும்,

---

[1]குறுந்தொகை - 53. [2]சிலப்பதிகாரம் - 5-ம் காதை.



"அணங்குடைப் பனித்துறை கைதொழு தேத்தி
யாயு மாயமொ டயரும்" (அகம் -240.)

எனவும் வரும்.

இனிப் பாலைக்கு,

"சினைவாடச் சிறக்குநின் சினந்தணிந் தீகெனக்
கனைகதிர்க் கனலியைக் காமுற லியைவதோ"

(கலி-16.)

எனவும்,

"வளிதரு செல்வனை வாழ்த்தவு மியைவதோ"

(கலி - 16.)

எனவும் ஞாயிற்றைத் தெய்வமாக்கி அவனிற் றோன்றிய

மழையினையுங் காற்றினையும் அத்தெய்வப் பகுதியாக்கிக் கூறு பவாலெனின், எல்லாத் தெய்வத்திற்கும் அந்தணர் அவி கொடுக்குங்கால் அங்கி ஆதித்தன்கட் கொடுக்கு மென்பது வேதமுடிபாகலின், ஆதித்தன் அவ்வெல்லா நிலத்திற்கும் பொதுவென மறுக்க. இவ்வாசிரியர் கருப்பொருளாகிய தெய் வத்தினை முதற் பொருளோடு கூட்டிக் கூறியது தெய்வவழி பாட்டு மரபு இதுவே, ஒழிந்தது மரபன்றென்றற்கு. எனவே அவ்வந் நிலத்தின் தெய்வங்களே பாலை நிலத்திற்குந் தெய்வ மாயிற்று.

உறையுலகென்றார், ஆவும் எருமையும் யாடும் இன்புறு மாற்றான் நிலைபெறும் அக்காட்டின் கடவுளென்றற்கு. மைவரை எனவே மழைவளந்தருவிக்கும் முருகவேளென்றார். இந்திரன் யாற்றுவளனும் மழைவளனுந் தருமென்றற்குத் தீம்புனலென்றார். திரை பொருது கரை கரையாமல் எக்கர் செய்தல் கடவுட் கருத்தென்றற்குப் பெருமணலென்றார்.

இனி, முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என்ற முறை யென்னை யெனின், இவ்வொழுக்க மெல்லாம் இல்லறம் பற் றிய ஒழுக்கமாதலின், கற்பொடு பொருந்திக் கணவன் சொற் பிழையாது இல்லிருந்து நல்லறஞ் செய்தல் மகளிரது இயற்கை முல்லையாதலின் அது முற்கூறப்பட்டது. எனவே,

முல்லையென்ற சொற்குப் பொருள் இருத்தலாயிற்று, [1]' முல்லை சான்ற முல்லையம் புறவின்' என்பவாகலின். புணர்தலின்றி இல்லறம் நிகழாமையிற் புணர்தற் பொருட்டாகிய குறிஞ்சியை அதன்பின் வைத்தார். இதற்குக் காரணம் இறந்தது. [2]' கருங்காற் குறிஞ்சி சான்றவெற் பணிந்து'. என்பது கரு.

புணர்ச்சிப் பின் ஊடல் நிகழ்தலின் அதன்பின் மருதத்தை வைத்தார். [3]' மருதஞ் சான்ற மருதத் தண்பணை' என்புழி மருதமென்றது ஊடியுங் கூடியும் போகம் நுகர்தலை. பரத்

தையிற் பிரிவுபோலப் பிரிவொப்புமை நோக்கி நெய்தலை ஈற்

றின்கண் வைத்தார். நெய்தற் பறையாவது இரங்கற் பறை

யாதலின், நெய்தல் இரக்கமாம்.

"ஐதக லல்குன் மகளிர்

நெய்தல் கேளன்மார் நெடுங்கடை யானே" (புறம் - 389)

என வரும்.

இனி இவ்வாறன்றி [4]முல்லை முதலிய பூவாற்

பெயர்பெற் றன இவ்வொழுக்கங்களெனின், அவ்வந்நிலங்கட்கு ஏனைப் பூக்களும் உரியவாகலின் அவற்றாற் பெயர் கூறலும் உரிய வெனக் கடாவுவாற்கு விடையின்மை உணர்க.

இதனானே நடுவுநிலைத்திணை யொழிந்த நான்கற்கும் பெயரும் முறையுங் கூறினார். இந்நான்கும் உரிப்பொருளாதல் 'புணர்தல் பிரிதல்' (14) என்புழிக் கூறுதும். கருப்பொருளா கிய தெய்வத்தை முதற்பொருளோடு கூறியது, அவை 'வந்த நிலத்தின் பயத்தவாய்' (19) மயங்குமாறுபோல மயங் காது இதுவே யென்றற்கும், கருப்பொருளுடைத் தெனப் பட்டபாலைக்குத் தெய்வத்தை விலக்குதற்கும் என்றுணர்க.

---

[1]சிறுபாண் - 169. [2]மதுரை - 300. [3]சிறுபாண் - 186.
[4]இளம்பூரணர் உரைக்கு மறுப்பு.

உதாரணம் :—

"வன்புலக் காட்டுநாட்டதுவே" (நற்றிணை -59.) எனவும்,

"இரும்புபட் டிருளிய விட்டருஞ் சிலம்பிற்
......கன்மிசைச் சிறுநெறி" (அகம் - 128.)

எனவும்,

"அவ்வய னண்ணிய வளங்கே ழூரனைப்
புலத்தலுங் கூடுமோ தோழி" (அகம். 26.)

எனவும்,

"கானலுங் கழறாது...மொழியாது" (அகம் - 170.)

எனவும் நால்வகை யொழுக்கத்திற்கு நால்வகை நிலனும் உரியவாயினவாறு காண்க.

6. [1]காரு மாலையு முல்லை குறிஞ்சி
கூதிர் யாம மென்மனார் புலவர்.

இது முதலிரண்டனுள் நிலங்கூறிக் காலங்கூறுவான் முல்லைக்குங் குறிஞ்சிக்கும் பெரும்பொழுதுஞ் சிறுபொழு

துங் கூறுதல் நுதலிற்று.

இதன் பொருள்:—காரும் மாலையும் முல்லை - பெரும் பொழுதினுட் கார்காலமுஞ் சிறுபொழுதினுள் அக்காலத்து மாலையும் முல்லை யெனப்படும்; குறிஞ்சி கூதிர் யாமம் என்மனார் புலவர் - பெரும் பொழுதினுட் கூதிர்க்காலமுஞ் சிறு பொழுதினுள் அதன் இடையாமமும் குறிஞ்சி யெனப்படும் என்றவாறு.

முதல் கரு உரிப்பொருளென்னும் மூன்றுபாலுங் கொண்டு ஓர் திணையாமென்று கூறினாரேனும் ஒரு பாலினையுந்

[1]‘ காருமாலையு முல்லை’ ‘குறிஞ்சி, கூதிர் யாம மென்மனார் புலவர்’ என இரண்டு சூத்திரமாக ஓதுவர் இளம்பூரணர்.



திணையென்று அப்பெயரானே கூறினார்; வந்தான் என்பது உயர்திணை என்றாற்போல. இது மேலனவற்றிற்கும் ஒக்கும். இக்காலங்கட்கு விதந்து ஓர் பெயர் கூறாது வாளா கூறினார்: அப்பெயர் உலகவழக்காய் அப்பொருள் உணர நிற்றலின். காலவுரிமை எய்திய ஞாயிற்றுக்கு உரிய சிங்க வோரை முதலாகத் தண்மதிக்கு உரிய

கற்கடகவோரை யீருக வந்து முடியுந்துணை ஓர் யாண்டாமாதலின் அதனை இம்முறையானே அறுவகைப்படுத்து இரண்டு திங்கள் ஒரு காலமாக்கினர். இனி ஒருநாளினைப் படுசுடரமையந் தொடங்கி மாலையெனவும், அதன்பின் இடையாம மெனவும், அதன்பின் வைகறையெனவும், அதன்பின் காலையெனவும், அதன்பின் நண்பகலெனவும், அதன்பின் எற்பாடெனவும் ஆறுகப் பகுத்

தார். அவை ஒரோவொன்று பத்துநாழிகையாக முறையே சூத்திரங்களுட் சிறுபொழுது வைப்பர். இம்

பின்

பனியும் நண்பகலும் பிற்கூறிய காரணம் அச்சூத்திரத்துட் கூறுதும்.

முல்லைக்குக் காரும் மாலையும் உரியவாதற்குக் காரண மென்னை யெனின், பிரிந்து மீளுந் தலைவன்றிறமெல்லாம் பிரிந்திருந்த கிழத்தி கூறுதலே முல்லைப் பொருளாயும், பிரிந்து போகின்ருன் திறங்கூறுவனவெல்லாம் பாலையாயும் வருதலின், அம்முல்லைப் பொருளாகிய மீட்சிக்குந் தலைவி

இருத்தற்கும் உபகாரப்படுவது கார்காலமாம். என்னை?
விணவயிற் பிரிந்து மீள்வோன், விரைபரித் தேரூர்ந்து பாச
றையினின்று மாலைக் காலத்து ஊர்வயின் வரூஉங் காலம்
ஆவணியும் புரட்டாதியும் ஆதலின், அவை வெப்பமுந் தட்ப மும் மிகாது இடை நிகர்த்தவாகி ஏவல் செய்துவரும் இளை
யர்க்கு நீரும் நிழலும் பயத்தலானும், ஆர்பதம் மிக்கு
நீரும் நிழலும் பெறுதலிற் களிசிறந்து மாவும் புள்ளுந்
துணை போடின்புற்று விளையாடுவன கண்டு

தலைவற்குந் தலை அகத். சு]



விக்குங் காமக்குறிப்பு மிகுதலானுமென்பது.
புல்லைமேய்ந்து கொல்லேற்றோடே புனிற்றுக் கன்றை நினைந்து மன்றிற் புகு தரவுந் தீங்குழ லிசைப்பவும்

பந்தர்முல்லை வந்து மணங் கஞற்றவும் வருகின்ற தலைவற்கும் இருந்த தலைவிக்குங் காமக் குறிப்புச் சிறத்தலின் அக்காலத்து மாலைப்பொழுதும் உரித் தாயிற்று.

இனிக் குறிஞ்சியாவது புணர்தற்பொருட்டு. அஃது இயற்கைப் புணர்ச்சி முதலியனவாம்.

இயற்கைப் புணர்ச்சி

நிகழ்ந்தபின் களவு நீட்டிப்பக் கருதுந் தலைவற்கு அக் கள

விளைச் சிறப்பிக்குங்கால், தலைவி அரியளாக வேண்டுமாகவே அவ்வருமையை ஆக்குவது ஐப்பசியுங் கார்த்திகையுமாகிய

கூதிரும் அதன் இடையாமமு மென்பது. என்னை ? இருள் தூங்கித் துளி மிகுதலிற் சேறல் அரிதாதலானும், பாணுட்

கங்குலிற் பரந்துடன் வழங்காது மாவும் புள்ளுந் துணை யுடன் இன்புற்று வதிதலிற் காமக் குறிப்புக் கழியப் பெரு குதலானும், காவன்மிகுதி நோக்காது வருந் தலைவனைக் குறிக் கண் எதிர்ப்பட்டுப் புணருங்கால் இன்பம் பெருகுதலின், இந்நிலத்திற்குக் கூதிர்க்காலஞ் சிறந்ததெனப்படும்.

உதாரணம்:—

"விருந்தின் மன்ன ரருங்கலந் தெறுப்ப
வேந்தனும் வெம்பகை தணிந்தனன் றீம்பெய
காரு மார்கலி தலையின்று தேரு
மோவத் தன்ன கோபச் செந்நிலம்
வள்வா யாழி யுள்ளுறு புருளக்
கடவிக் காண்குவம் பாக மதவுநடைத்
தாம்பசை குழவி வீங்குசுரை மடியக்
கனையலங் குரல காற்பரி பயிற்றிப்
படுமணி மிடற்ற பயநிரை யாயங்
கொடுமடி யுடையர் கோற்கைக் கோவலர்



கொன்றையங் குழலர் பின்றைத் தூங்க
மனைமனைப் படரு நனைநகு மாலைத்
[1]தனக்கென வாழாப் பிறர்க்குரி யாளன்
பண்ணன் சிறுகுடிப் படப்பை நுண்ணிலைப்
புன்கா னெல்லிப் பைங்காய் தின்றவர்
நீர்குடி சுவையிற் றீவிய மிழற்றி
முகிழ்நிலாத் திகழ்தரு மூவாத் திங்கள்
பொன்னுடைத் தாலி யென்மக னொற்றி
வருகுவை யாயிற் றருகுவென் பாலென
விலங்கமர்க் கண்ணள் விரல்விளி பயிற்றித்
திதலை யல்குலெங் காதலி

புதல்வர்ப் பொய்க்கும் பூங்கொடி நிலையே.''
(அகம் - 54.)

இது பாகற்குரைத்தது.

இது முல்லைக்கட் காரும் மாலையும் வந்தது.

"மன்றுபா டவிந்து மனைமடிந் தன்றே
கொன்றோ ரன்ன கொடுமையோ டின்றே
யாமங் கொளவரிற் கனைஇக் காமங்
கடலினு முரைஇக் கரைபொழி யும்மே
யெவன்கொல் வாழி தோழி மயங்கி
யின்ன மாகவு நன்னர் நெஞ்ச
மென்னொடு நின்னொடுஞ் சூழாது கைம்மிக்
கிறும்புபட் டிருளிய விட்டருஞ் சிலம்பிற்
குறுஞ்சுனைக் குவளை வண்டுபடச் சூடிக்
கானக நாடன் வரூஉம் யானைக்
கயிற்றுப்புறத் தன்ன கன்மிசைச் சிறுநெறி
மாரி வானந் தலைஇ நீர்வார்
பிட்டருங் கண்ண படுகுழி யியவி
னிருளிடை மிதிப்புழி நோக்கியவர்
தளரடி தாங்கிய சென்ற தின்றே.'' (அகம்
- 128.)

[1]இவ்வடி மணிமேகலையினும் (5-வது காதை 73) வந்துள்ளது.

இரவுக்குறிக்கட் சிறைப்புறமாகத் தோழிக்கு உரைப் பாளாக உரைத்தது.

இது குறிஞ்சிக்குக் கூதிரும் யாமமும் வந்தது.

நிலனும் பொழுதும் முதலென்றமையிற் கார் முதலாதல் வேண்டும்; வேண்டவே, அதற்கிடையின்றிக் கூறிய மாலையும் அதன் சினையாமாதலின், கார்காலத்து மாலையென்பது பெற்றும். இது கூதிர்யாமம் என்பதற்கும் ஒக்கும்.

**7.** பனியெதிர் பருவமு முரித்தென மொழிப.

இஃது எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறியது : முற் கூறிய குறிஞ்சிக்கு முன்பனியும் உரித்தென்றலின்.

இதன்பொருள்:—பனி எதிர் பருவமும் உரித்து என மொழிப - பனி முற்பட்ட பருவமுங் குறிஞ்சிக்கு உரித் தென்று கூறுவர்

ஆசிரியர் என்றவாறு.

எதிர்தலென்பது முன்னுதல்; எனவே, முன்பனி யாயிற்று. அது ஞாயிறுபட்ட அந்திக்கண் வரும்.

உரித்தென்றதனாற் கூதிர்பெற்ற யாமமும் முன்பனி பெற்று வரும் எனக்கொள்க.

உதாரணம் :—

"[1]பனியடூஉ நின்ற பானாட் கங்குற்
றமியோர் மதுகை தூக்காய் தண்ணென
முனிய வலைத்தி முரணில் காலை" (அகம் - 124.)

என முன்பனியாமங் குறிஞ்சிக்கண் வந்தது.

---

(பி - ம்)—[1]பனிபட.

**8.** [1]வைகுறு விடியன் மருத மேற்பாடு
நெய்த லாதன் மெய்பெறத் தோன்றும்.

இனிச் சிறுபொழுதே பெறுவன கூறுகின்றது.

---

[1]'வைகறை விடியன் மருதம்' 'எற்பாடு, நெய்த லாதன் மெய் பெறத் தோன்றும்' என இரண்டு சூத்திரமாக ஓதுவர் இளம்பூரணர்.

சிறுபொழுதுபற்றிச் சிவஞான முனிவர் தொல்காப்பிய முதற் சூத்திர விருத்தியிற் கூறுவன வருமாறு:—

"முல்லை முதலாக வைத்தெண்ணியது முதற்பொருண் முறை பற்றியென்றதென்னை? காடுறையுலக முதல்வைத் தெண்ணுதலின் நிலமுதற் பொருள் கூறியதே; நிலமுறைபற்றி யன்று. இனிக் கால முதற்பொரு ளிரண்டனுட் பெரும்பொழுது ஞாயிற்றிற்குரிய சிங்க வோரை முதல்வைத் தெண்ணுதல் முறையாயினும் திணைகள் ஒன் றும் பலவும் பெரும்பொழுது பெறுதலின், அம்முறைபற்றி முறை கோடல் பொருத்தமன்று. சிறுபொழுது காமத்திற்குச் சிறந்த விராக் காலத்தின் முற்கூறு முதல்வைத் தெண்ணியது முறையாயினும், எற்பாடாகிய பின்பகலை இறுதிக்கண் வையாமையின் அதுவு முறை பற்றிக் கூறியதன்று. இங்ஙனமாகலானும் வேறுகாரண மின்மையானும், தலைவன் பிரிந்துழித் தலைவி யாற்றியிருத்தல் கற்பாகலின், இல்லறத்திற்குக் கற்புச் சிறந்தமைபற்றி முல்லை முதல்வைத்

தென்னிறுமெனவே கோடுமெனின், அது பொருந்தாது : ஏனைத் திணைகள் அவ்வாற்றான் முறை பெருமையானும், கந்தருவ வழக்கிற் கற்பினுங் களவு சிறந்ததாகலானு மென்பது. இனி, நிலம்பற்றியும் பெரும்பொழுது பற்றியும் முறைகோடல் சாலாதாயினும், சிறு
பொழுதுபற்றி முறைகோடல் சாலுமென்க. ஆண்டு எற்பாடென்
றது நாள்வெயிற்காலையே யாம். படுதல் உண்டாதல் என்னும்
பொருட்டு. இப்பொருள் காணுதார் எற்பாடு பிற்பகலென மயங்கிக்
கூறுப. ' இலமென் கிளவிக்குப் படுவரு காலே ' ' இலம்பா டொற்
கமா யிரண்டும் வறுமை ' என்னுஞ் சூத்திரங்களில் நச்சினர்க்கினிய
ரும், படுதல் உண்டாதலென் றுரைத்தவாறு காண்க. எனவே எற்பா
டென்றது ஞாயிற்றினுதய மென்றவாருயிற்று. தலைவன் பிரிந்
தழித் தனித்திருந்த தலைவி இராக்கால முழுவதுங் கொன்னே
கழிந்தமைபற்றி இரங்குதற்குரிய காலம் அதுவர்மென்பார், ' எற்

இதன்பொருள்:—வைகுறு விடியல் மருதம் - வைகறை
யும் விடியற்காலமும் மருதமாதலும், 'எற்பாடு
நெய்தல் ஆதல் மெய்பெறத் தோன்றும் -
எற்படுகாலம் நெய்தலாதலும் பொருள்பெறத்
தோன்றும் என்றவாறு.

---

பாடு - நெய்த லாதன் மெய்பெறத் தோன்றும்' என்றார்.
இனி யிவ்வாறன்றி, வைகுறு விடியலென்னும்
வினைத்தொகையை வை
குறவும் விடியலுமென உம்மைத்தொகையாக்கி,
வைகறையை வைகுறுவெனவும், நாள்வெயிற்காலையை
விடியலெனவுங் கொண்டு,
இவ்விரண்டு மருதத்திணைக்குரியன வென்றும், பிற்பகலை
யெற்பா டெனக்கொண்டு, அது நெய்தற்குரித்தென்றும்,
இங்ஙனஞ் சிறு
பொழு தறுவகைப்படுமென்று முரைப்பாருமுளர். 'காலையும் பக
லுங் கையறு மாலையு - மூர்துஞ் சியாமமும் விடியலு மென்றிப் -

பொழுதிடை தெரியிற் பொய்யே காமம்' என்னுங் குறுந்தொகைப் பாட்டினுட் சிறுபொழு தைந்தே கொண்டமையானும், பகலெனவே பிற்பகலு மடங்குமெனின், அதுபற்றி முற்பகலு மடங்குமென்றொழி யாது காலையை வேறு கூறினமையின் அது கருத்தன்றாகலானும், ஆண்டும் வைகறையினையே விடியலென்றமையிற் காலையை விடிய லென்றல் பொருந்தாமையானும், இதனானே 'விடியல் வெங்கதிர் காயும்' என்புழி விடியற்பின்னர்த்தாகிய வெங்கதிரென்பதே பொரு ளாமாகலானும் விடிதல் இருள் புலர்தல் என்னும் பொருட்டாகலின், விடியல், புலரி, வைகறை யென்பன ஒரு பொருட்கிளவி யாகலானும், 'ஊடுதல் காமத்திற் கின்ப மதற்கின்பங் - கூடி முயங்கப் பெறின்' என்பவாகலின் ஊடலிறுதிக்கட் கூடலொருதலை யென் பது பெறப்படுதலின், கற்புக்காலத்து நாள்வெயிற்காலையிற் புணர் தன் முறையன்மையின் அக்காலத்தி னூடல் செல்லாமையானும், அடிசில் கைதொட்ட பின்னர்ப் பயமின்றிக் கழியும் பிற்பகல் புரா ணக் கேள்வி முதலியவற்றானாதல், விளையாட்டு முதலியவற்றா னாதல் பொழுதுபோக்கப்படுவதல்லது விதிக்கப்படுங் கருமமொன் றற்கு முரித்தன்மையின், அதனை யொன்றாக வைத்தெண்ணிச் சிறு பொழு தறுவகைத் தென்றல் பொருந்தாமையானும், ஆசிரியர் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலையென முறைசெய்தற்கேது

வைகுறுதலும் விடியலும் என்னும் உம்மை நின்றது.

தொக்கு செவியறிவுறுத்தலைச் செவியறிவுறூஉ (423) என்றாற் போல வைகுறுதலை வைகுறு என்றார். அது மாலையாமமும்

---

மாலை, யாமம், வைகறை, காலை, நண்பகல் என்னுஞ் சிறுபொழுதின் கிடக்கை முறையேயன்றி வேறின்மையானும், ஏனைத் திணைகட்குச் சிறுபொழு தொரோவொன்றேயாகலின், மருதமாத்திரைக் கிரண்டு கோடல் பொருந்தாமையானும், அஃதுரையன்றென மறுக்க. வைகுறுவிடியல்: இராப்பொழுது தன்னோடு கழிவுறுதற்கேதுவாகிய விடியலென்க. 'விளம்பழங் கமழுங் கமஞ்சூற் குழிசி' என்னு நற்றிணையுள் (12) 'வைகுபுலர் விடியல்' என்றது மப்பொருட்டு. அற்றை நாட்பொழுது தன்னெல்லையோ டுறுதல்பற்றி வைகறையெனவும் படும். வைகுதல் கழிதலென்னும்பொருட்டு. 'ஆடலின் னரவ்வமும்' என்னுஞ் செய்யுளில் (சிந்தாமணி-156) நச்சினார்க்கினியரும் 'வைகளும் வைகின்றே' என்பதற்கு நாடோறுங் கழியாநின்றதெனப் பொருளுரைத்தார். இவ்வாறன்றி மாலையும் இடையாமமுங் கழியுந் துணையும் அக்கங்குல் வைகுறுதலின் வைகுறுவாயிற்றென்பார்க்கு ஏனைப் பொழுதுகளுந் தமக்கு முன்னுளவாகிய பொழுதுகள் கழியுந் துணையும் தாம் வைகுறுதலின் அவையும் அப்பெயர் பெறுவான் செல்லுமென்றொழிக. பெரும்பொழுது ஆறென்றார்க்குச் சிறுபொழு

தும் ஆறென்றலே பொருத்தமுடைத்தெனின், அங்ஙனங் கூறு வார்க்கு, மருதநெய்தல்கட்குப் பெரும்பொழுதெல்லா முரியவென் றார்க்குச் சிறுபொழுதுமெல்லா முரியவென்றல் பொருத்தமுடைத் தெனல் வேண்டுதலின் அது கடாவன்றென விடுக்க."

இஃதன்றியும், எற்பாடு என்பது பகலின் முற்பகுதியையே குறிக்கும் என்பதற்கும் பிற சான்றுகளும் உள. அகத்திணையியலிலே எற்பாடு என்பது நெய்தற்றிணைக்கு உரித்தாக் ஓதப்பட்டது. புறத்திணையியலிலே ' தும்பை தானே நெய்தலது புறனே ' என்னும் சூத்திரத்தால், நெய்தற்றிணைக்குரிய எற்பாடு என்னும் சிறுபொழுது தும்பைத்திணைக்கும் எய்தியதாயிற்று. **இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும்** தும்பைப்போர் முடியுங்காலம் எற்பாடு (பகலின் மூன்றாங் அகத். அ]

அகத்திணையியல் 1

இடையாமமுங் கழியுந்துணையும் அக்கங்குல் வைகுறுதல்; அது கங்குல் வைகிய அறுதியாத ஞெகிழ வைகறை யெனவுங் கூறுப. அதுவும் பாடம்.நாள் வெயிற்காலையை விடியலென்றார். [1]'விடியல்வெங் கதிர்காயும் வேயமலைகலன்றை' என்ப. [2]'விடியல்

---

கூறு) ஆதலின் தும்பை நெய்தற்குப் புறனாயிற்று என்றார். போர் தொடங்கும்பொழுதைக் குறியாமல் அதி முடியும்பொழுதைக் குறித்ததென்றல்

பொருந்தாவுரையாம். உதாரணங்களாகக் காட்டப் பட்ட பாரதப் பாட்டு, புறப்பாட்டு முதலியவற்றிலே குறித்த தும் பைப் போர் நிகழ்ச்சியெல்லாம் பகலின் மூன்றாங்கூற்றைக் கருதிய வல்ல. கம்பநும்,

'மற்றும் வான்படை வானவர் மார்பிடை
இற்றி லாதன வெண்ணு மிலாதன
பற்றி னன்கவ சம்பட மார்பிடைச்
சுற்றி னனெடுந் தும்பையுஞ் சூடினன்'
(இராவணன் போர்க்கோலம் - முதற்போர் - 97.)

'கிளர்மழைக் குழுவிடைக் கிடந்த மின்னென
வளர்பிறை நெற்றியிற் பட்ட மார்த்தனன்
இளவரிக் கவட்டிலை ஆரொ டோர்பெறத்
துளவிய தும்பையஞ் சுழியஞ் சூடினன்'
(இராமன் போர்க்கோலம் - ஷை 115.)

'நாகர் நானில நான்முக னுடைன நயந்த
பாக மூன்றையும் வென்றுகொண் டமார்முன்
பணிந்த
வாகை மாலையும் மருங்குற வரிவண்டோ
டளவித்
தோகை யன்னவர் விழிதொடர் தும்பையும்
சூட்டி' (இராவணன் போர்க்கோலம்

- தேரோறு - 16.) என்றும் பாடினார். அவர்க்கும் அப்போர் நிகழ்ச்சிப்பொழுது **காலை** யென்பதே கருத்தன்றிப் பகலின் கடைக்கூறன்றென்பது காண்க.

முதற்பொழுதின் பகுதியாகிய பொழுது என்பதை ஆசிரியர் **பெரும்பொழுது** என்றும், சிறுபொழுது என்றும் இரண்டாகப்

---

[1] கலித்தொகை - 45. [2] அகம் - 196.



வைகறை யிடூஉ மூரன்' என்றது விடியற்கு முன்னர்த்

தாகிய வைகறையென உருபுதொக்கு முன்மொழி நிலையலாயிற்று. பரத்தையிற்பிரிந்த தலைவன் ஆடலும் பாடலுங் கண்டுங் கேட்டும் பொழுது கழிப்பிப் பிறர்க்குப் புலனாகாமல்

பகுத்துக்கொண்டார். பெரும்பொழுது எனினும் இருதுவெனினும் ஒக்கும். அவை: கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்னும் ஆறும். இப்பெரும்பொழுது என்பதுபற்றிப் பிற்பட்ட நூலாசிரியர்க்கும், உரையாசிரியர்க்கும் மயக்கம் ஒன்றும் இல்லை. சிறுபொழுது என்பதுபற்றியோ எல்லோரும் மயங்கித் தத் தமக்குத் தோன்றியவாறே வரையறை செய்தார். சிலர் சிறு பொழுது ஐந்தெனக் கொண்டார். சிலர் ஆறெனக் கொண்டார். ஆறெனப்பட்டன :—வைகறை, விடியல், எற்பாடு, நண்பகல், மாலை, யாமம் என்னும் இவை. ஐந்தென்பன :—மாலை, யாமம், வைகறை, எற்படு காலை, வெங்கதிர் காயும் நண்பகல் என்னும் இவை.

இவ்வாறு மயங்குதற்குக் காரணம் 'வைகுறு விடியல்' எனவும் 'எற்பாடு' எனவும் ஆசிரியர் சூத்திரங்களில் புணர்த்தோதிய குறியீடு களுக்கு உரையாசிரியர்கள் செம்பொருள் காணமாட்டாமையேயாம்.

உரையாசிரியர் இளம்பூரணர் 'வைகறை விடியல்' எனப் பாடங் கொண்டு வைகறை என்பது வேறு, விடியல் என்பது வேறு என்றும், வைகறை என்பது இரவின் பிற்கூறு என்றும், விடியல் என்பது பகலின் முற்கூறு என்றும், எற்பாடு என்பது பகலின் பிற்கூறு என்றும்; மாலையென்பது இரவின் முற்கூறு என்றும்

கூறினர்..

அவர் உரையையே தழுவி நச்சினார்க்கினியரும் கூறினர். கூறியவர்

சிறுபொழுது ஒவ்வொன்றினுக்கும் பப்பத்து நாழிகை வரையறை

கூறினர். இலக்கண விளக்க நூலாரும் நச்சினார்க்கினியருரையையே

தழுவிக் கூறினர்.

· இனிச் சிலப்பதிகார வுரையாசிரியராகிய அடியார்க்குநல்லார்

சிறுபொழுது ஆறெனக் கொண்டவர் மருதத்திற்கு .வைகறை

யொன்றே காட்டி, விடியல் என வேறுகாட்டா தொழிந்ததன்றி

முல்லைக்குரிய மாலையையே நெய்தலுக்கும் காட்டினர். நாற்கவிராச

நம்பியார் சிறுபொழுது ஐந்தே கொண்டார். அதன் உரைகாரர்

மீளுங் காலம் அதுவாதலானும், தலைவிக்குங் கங்குல் யாமங் கழியாது நெஞ்சழிந்து ஆற்றுமை மிகுதலான் ஊட லுணர் தற் கெளிதாவதோர் உபகாரமுடைத்தாதலானும், வைகறை கூறினர்.

இனித் தலைவி விடியற்காலஞ் சிறுவரைத்தாதலின் இதனாற் [1]பெரும் பயன் இன்றெனமுனிந்து வாயிலடைத்து ஊடனீட்டிப்பவே அவ் வைகறைவழித் தோன்றிய விடியற் கண்ணும் அவன் மெய்வேறுபாடு விளங்கக் கண்டு வாயில் புகுத்தல் பயத்தலின் விடியல் கூறினர்.

'வீங்குநீர்' என்னும் மருதக்கலியுள்,

"அணைமென்றேள் யாம்வாட வமர் துணைப் புணர்ந்துநீ
மணமனையா யெனவந்த மல்லலின் மாண்பன்றே

---

எற்பாடு என்பதற்கு ஞாயிறு மறையும்பொழுது என்றுரேனும், நம்பி யார் கருத்து நாள்வெயிற்காலையே என்பதற்கு 'எற்படுகாலை' 'என் புழிக்காலை' யென்னும் சொல்லே சான்றும். இறையனர் களவியற் பொருள்கண்ட, எல்லாருக்கும் முற்பட்டவாகிய நக்கீரனர் சிறு பொழுது ஐந்தென்றே கொண்டார். அவர் வைகறை வேறு, விடியல் வேறு என்று கொள்ளாது வைகறையென ஒன்றே கொண்டார். அவர் எற்பாடு என்பதற்கு விளக்கமான பொருள் கூறிற்றிலரேனும்,

ஞன் அதன் திறமாகிய வரைபாய்தலுங் கொள்க. 'இளமை தீர்திறம்' என்றதனுல் தலைவன் முதிர்ச்சியும், இருவரும் முதிர்ந்தபருவத்துந் துறவின்பாற் சேறலின்றிக் காமநுகர்தலும் கொள்க. 'காமத்து மிகுதிறம்' என்றதனுற் சிறிது தேறப்படுதலுங் கொள்க.

---

[1]கலி - 109.



இவை கந்தருவத்துட்[1]படாஅ வழீஇயின. இவற்றுள் ஏறிய மடற் றிறமுங் காமத்து மிகுதிறமும் புணர்ச்சிப்பின் நிகழ்வனவாம்; அது, 'மடன்மாக் கூறு மிடனுமா ருண்டே' (102) என்பதனுல் ஏறுவலெனக் கூறிவிடாதே ஏறுதலாம். உதாரணம்:—

"சான்றவிர் வாழியோ சான்றவி ரென்றும்
பிறர்நோயுந் தந்நோய்போற் போற்றி யறனறிதல்
சான்றவர்க் கெல்லாங் கடனுல் லிவ்விருந்த
சான்றீர் நுமக்கொன் றறிவுறுப்பென் மான்ற
துளியிடை மின்னுப்போற் றோன்றி யொருத்தி
யொளியோ டுருவென்னைக் காட்டி யளியளென்
னெஞ்சாறு கொண்டா ளதற்கொண்டு துஞ்
னணியலங் காவிரைப் பூவோ டெருக்கின்
பிணையலங் கண்ணி மிலைந்து மணியார்ப்ப

வோங்கிரும் பெண்ணை மடலூர்ந்தெ னெவ்வநோய்
தாங்குத றேற்ரு விடும்பைக் குயிர்ப்பாக
வீங்கிழை மாதர் திறத்தொன்று நீங்காது
பாடுவென் பாய்மா நிறுத்து ;

யாமத்து மெல்லையு மெவ்வத் திரையலைப்ப
மாமேலே னென்று மடல்புணையா நீந்துவேன்

றேமொழி மாத ருறாஅ துறீஇய
காமக் கடலகப் பட்டு ;
உய்யா வருநோய்க் குயலாகு மைய
லுறீஇயா ளீத்தவிம் மா ;
காணுந ரெள்ளக் கலங்கித் தலைவந்தெ
ணாணெழின் முற்றி யுடைத்துள் ளழித்தரு
மாணிழை மாதரா ளேஎனக் காமன
தாணையால் வந்த படை ;
காமக் கடும்பகையிற் றோன்றினேற் கேம
மெழினுத லீத்தவிம் மா ;

அகையெரி யானுதென் னுருயி ரெஞ்சும்
வகையினு லுள்ளஞ் சுடுதரு மன்னே
முகையே ரிலங்கெயிற் றின்னகை மாதர்
தகையாற் றலைக்கொண்ட நெஞ்சு ;

---

(பி - ம்)—[1]பட்டு.

அழன்மன்ற காம வருநோய் நிழன்மன்ற
நேரிழை யீத்தவிம் மா;

ஆங்கதை,
யறிந்தனி ராயிற் சான்றவிர் தான்றவ
மொரீஇத் துறக்கத்தின் வழீஇ யான்றோ
ருள்ளிடப் பட்ட வரசனைப் பெயர்த்தவ
ருயர்நிலை யுலக முறீஇ யாங்கென்
றுயர்நிலை தீர்த்த னுந்தலைக் கடனே." (கலி - 139.)

இஃது ஏறிய மடற்றிறம்.

"உக்கத்து மேலு நடுவுயர்ந்து வாள்வாய
கொக்குரித் தன்ன கொடுமடாய் நின்னையான்
புக்ககலம் புல்லினெஞ் சூன்றும் புறம்புல்லி
னக்குளுத் துப் புல்லலு மாற்றே னருளீமோ
பக்கத்துப் புல்லச் சிறிது." (கலி - 94.)

இதனுள், 'கொக்குரித்தன்ன' என்பதனால் திரைந்தமை கூறலின் இளமைதீர்திறமாயிற்று.

தோல்

"உளைத்தவர் கூறு முறையெல்லா நிற்க
முளைத்த முறுவலார்க் கெல்லாம்—விளைத்த
பழங்கள் ளனைத்தாய்ப் படுகளி செய்யு
முழங்கும் புனலூரன் மூப்பு." (பு. வெ. 12, 14)

"அரும்பிற்கு முண்டோ வலாது நாற்றம்
பெருந்தோள் விறலி பிணங்கல்—சுரும்போ
டதிரும் புனலூரற் காரமிர்த மன்றே
முதிரு முலையார் முயக்கு." (பு. வெ. 12, 13)

என்பனவும் அது.

[1]'புரிவுண்ட புணர்ச்சி' என்னும் (25) நெய்தற்பாட்டுக் காமத்து மிகுதிறம். இதனைப் [2]பொருளியலுட் காட்டுதும். ஆண்டோதும் இலக்கணங்களுந் தோன்ற இதனுட்டெளிந்து கூறுவனவும் ஆண்டுக் காண்க.

"ஏஎ யிஃதொத்த னாணிலன் றன்னொடு
மேவேமென் பாரையு மேவினன் கைப்பற்று

[1]கலி - 142. [2]தொல் - பொருள் - பொருளியல், 42 - உரை.



மேவினு மேவாக் கடையு மவையெல்லா
நீயறிதி யானஃ தறிகல்லேன் பூவமன்ற
மெல்லிணர் செல்லாக் கொடியன்னாய் நின்னையான்
புல்லினி தாகலிற் புல்லினெ னெல்லா

தமக்கினி தென்று வலிதிற் பிறர்க்கின்னா
செய்வது நன்றாமோ மற்று." (கலி - 62.)

இது மிக்ககாமத்து மிடல்.

'செப்பிய நான்கு' எனவே செப்பாதனவாய் அத்துணைக்

கந்தருவமாகக் கூறுகின்ற 'பின்னர் நான்கும் பெருந்திணை பெறும்' (105) என்ற பெருந்திணையும் நான்கு உளதென்று உணர்க. 'குறிப்பு' என்றதனான் அந்நான்கும் பெருந்திணைக்குச் சிறந்தனவெனவும், ஈண்டுக் கூறியன கைக்கிளைக்குச் சிறந்தன வெனவுங் கொள்க. (நிக)

**52.** முன்னைய நான்கு முன்னதற் கென்ப.

இது 'முன்னைய மூன்றுங் கைக்கிளைக் குறிப்பே' (105) எனக் களவியலுட் கூறுஞ் சிறப்பில்லாக் கைக்கிளை போலன்றிக் காமஞ்சாலா இளமையோள்வயிற் கைக்கிளை போல இவையுஞ் சிறந்தன என எய்தாத தெய்துவித்தது.

இதன்பொருள் :—இயற்கைப் புணர்ச்சிக்கு முன்னிகழ்ந்த காட்சியும் ஐயமுந் தெரிதலுந் தேறலும் என்ற குறிப்பு நான்கும் நற்காமத்துக்கு இன்றியமையாது வருதலின் முற்கூறிய சிறப்புடைக் கைக்கிளையாதற்கு உரியவென்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

களவியலுட் கூறுங் கைக்கிளை சிறப்பின்மையின் 'முன்னதற்குரிய' எனச் சிறப்பெய்துவித்தார். களவியலுள் 'ஒத்த கிழவனுங் கிழத்தியுங் காண்ப' (93) என்றது முதலாக இங் நான்கும் கூறுமாறு ஆண்டுணர்க. இவை தலைவி வேட்கைக் குறிப்புத் தன்மேனிகழ்வதனைத் தலைவன் அறிதற்கு முன்னே தன் காதன்மிகுதியாற் கூறுவனவாதலிற் கைக்கிளையாயிற்று. இவை தலைவற்கே உரியவென்பது 'சிறந்துழி யையஞ் சிறந்ததென்ப' (94) என்னுஞ் சூத்திரத்திற் கூறு



தும். இவையும் புணர்ச்சி நிமித்தமாய்க் குறிஞ்சி யாகாவோ வெனின், காட்சிப்பின் தோன்றிய ஐயமும் ஆராய்ச்சியுந் துணிவும் நன்றெனக் கோடற்கும் அன்றெனக் கோடற்கும் பொதுவாகலின் இவை ஒருதலையாக நிமித்தமாகா; வழிநிலைக் காட்சியே நிமித்தமாமென் றுணர்க. (௫௨)

**53.** நாடக வழக்கினு முலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கங்
கலியே பரிபாட் டாயிரு [1]பாங்கினு
முரிய தாகு மென்மனார் புலவர்.

இது புலனெறி வழக்கம் இன்னதென்பதூஉம், அது நடுவணைந்திணைக்கு உரிமையுடைத்தென்பதூஉம் இன்ன செய்யுட்கு உரித்தென்பதூஉம் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் :—நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்-புனைந்துரைவகையானும் உலகவழக்கத்தானும், பாடல் சான்ற புலனெறி வழக்கம்-புலவராற் பாடுதற்கமைந்த புலவராற்று வழக்கம், கலியே பரிபாட்டு அ இரு பாங்கினும் உரியது ஆகும் என்மனார் புலவர் - கலியும் பரிபாடலுமென்கின்ற அவ்விரண்டு கூற்றுச் செய்யுளிடத்தும் நடத்தற்கு உரியதாமென்று கூறுவர் புலவர் என்றவாறு.

இவற்றிற்கு உரித்தெனவே, அங்ஙனம் உரித்தன்றிப் புலனெறிவழக்கம் ஒழிந்த பாட்டிற்கும் வருதலும், புலனெறி வழக்கம் அல்லாத பொருள் இவ்விரண்டற்கும் வாராமையுங் கூறிற்று. இவை தேவபாணிக்கு வருதலும், கொச்சகக்கலி பொருள் வேறுபடுதலும் [2]செய்யுளியலுள் வரைந்து ஓதுதும். 'மக்க ளுதலிய வகனைந் திணையும்' (54) என மேல் வரும் அதிகாரத்தானும் இதனை அகத்திணையியலுள் வைத்தமையானும் அகனைந்திணையாகிய காமப்பொருளே புலனெறி வழக்கத்திற்குப் பொருளாமென்றுணர்க.

'பாடல் சான்ற' என்றதனாற் பாடலுள் அமைந்தன வெனவே, பாடலுள் அமையாதனவும் உளவென்று கொள்ள வைத்தமையிற் கைக்கிளையும் பெருந்திணையும் பெரும் பான்மையும் உலகியல் பற்றிய புலனெறி வழக்காய்ச் சிறு பான்மை வருமென்று கொள்க. செய்யுளியலுட் கூறிய முறைமையின்றி ஈண்டுக் கலியை முன்னோதியது கலியெல் லாம் ஐந்திணைப்பொருளாய புலனெறிவழக்கிற் காமமும், கைக்கிளை பெருந்திணையாகிய உலகியலே பற்றிய புலனெறி வழக்கிற் காமமும்பற்றி வருமென்றற்கும், பரிபாடல் தெய்வ வாழ்த்து உட்படக் காமப்பொருள் குறித்து உலகியலே பற்றி வருமென்றற்கும் என்றுணர்க.

ஆசிரியமும் வெண்பாவும் வஞ்சியும் அகம் புறமென்னும் இரண்டிற்கும் பொதுவாய் வருமாறு நெடுந்தொகையும் புறமுங் கீழ்க்கணக்கும் மதுரைக்காஞ்சியும் பட்டினப்பாலை யும் என்பனவற்றுட் காண்க. மருட்பாத் 'தானிதுவென் னுந் தனிநிலை' (397) இன்மையின் வரைநிலையின்று.

"மனைநெடு வயலை வேழஞ் சுற்றுந்
துறைகே ழூரன் கொடுமை நாணி
நல்ல னென்றும் யாமே
யல்ல னென்னுமென் றடமென் றோளே." (ஐங்குறு - 11.)

இதனுள் முதல் கரு வுரிப்பொருளென்ற மூன்றுங் கூற லின் நாடக வழக்கும், தலைவனைத் தலைவி கொடுமைகூறல் உலகியலாகலின் உலகியல்வழக்கும் உடன்கூறிற்று. இவ் விரண்டுங் கூடிவருதலே பாடலுட் பயின்ற புலனெறி வழக்க மெனப்படும். இவ்விரண்டினும் உலகியல் சிறத்தல் 'உயர்ந்தோர் கிளவி' (217) என்னும் பொருளியற் சூத்திரத் தானும் மரபியலானும் பெறுதும்.

"முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்
கழுவுறு கலிங்கங் [1]கழாஅ துடீஇக்
குவளை யுண்கண் குய்ப்புகை கமழத்
தான்றுழந் தட்ட தீம்புளிப் பாக

(பி - ம்)—[1]கழாஅ தூீஇ.



ரினிதெனக் கணவ னுண்டலி
னுண்ணிதின் மகிழ்ந்தன் றொண்ணுதன் முகனே."
(குறுந் - 167.)

இஃது உலகியலே வந்தது.
இனி அவ்வந் நிலத்து மக்களே

தலைவராயக்கால் அவை உலகியலேயாம்.

இனிக் கைக்கிளையுள் [1]அசுரமாகிய ஏறுகோடற் கைக்கிளை காமப்பொருளாகிய புலனெறிவழக்கில் வருங்கால் முல்லை நிலத்து ஆயரும் ஆய்ச்சியருங் கந்தருவமாகிய களவொழுக்கம் ஒழுகி வரையுங்காலத்து அந்நிலத்தியல்புபற்றி ஏறு தழுவி வரைந்து கொள்வரெனப் புலனெறி வழக்காகச் செய்தல் இக்கலிக்குரித்தென்று கோடலும் பாடலுள் அமையாதன என்றதனாற்கொள்க. [2]'மலிதிரையூர்ந்து' என்னும் முல்லைக்கலியுள் 'ஆங்க ணயர்வர் தழூஉ' என்னுந்துணையும் ஏறு தழுவியவாற்றைத் தோழி தலைவிக்குக்காட்டிக் கூறி, 'பாடுகம் வம்மின்' என்பதனால் தலைவனைப் பாடுகம் வாவென்றுட்கு அவளும் 'நெற்றிச் சிவலை . . . மகள்', 'ஒருக்குநாமாடு . . . மகன்' என்பனவற்றான் அலரச்சம் நீங்கினவாறும் அவற்றான் வருத்தியவாறுங் கூறிப் பாடியபின்னர், தோழி

"கோளரி தாக நிறுத்த கொலையேற்றுக்
காரி கதனஞ்சான் பாய்ந்த பொதுவற்கே
யார்வுற் றெமர்கொடை நேர்ந்தா ரலரெடுத்த
வூராரை யுச்சி மிதித்து" (கலி - 104.)

என [3]எமர் கொடைநேர்ந்தாரெனக் கூறியவாறுங் காண்க.

இவ்வாறே இம்முல்லைநிலத்து அகப்பொருளோடு கலந்துவருங் கைக்கிளை பிறவுமுள. அவையெல்லாம் இதனான் அமைத்துக் கொள்க.

---

[1] கைக்கிளைச் செய்யுள் என்பது கைக்கிளைப் பொருட்கு உரித்தாய் வரும் மருட்பா என்றவாறு. அஃதேல் ஈண்டெடுத்திய கலி வெண்பாட்டு மொழிந்த கைக்கிளைப் பொருண்மேல் வாராவோ வெனின் வருமென்பது 'நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்' என்புழிக் கொண்டாம் என்பது. (செய்யுளியல் - சூ. 160. பேராசிரியர் உரை).

புனைந்துரைவகையாற் கூறுப வென்றலிற் புலவர் இல்லனவுங் கூறுபவாலோவெனின், உலகத்தோர்க்கு நன்மை பயத்தற்கு நல்லோர்க்குள்ளனவற்றை ஒழிந்தோர் அறிந்தொழுகுதல் அறமெனக் கருதி அந்நல்லோர்க்குள்ளனவற்றிற் சிறிது இல்லனவுங் கூறுதலன்றி யாண்டும் எஞ்ஞான்றும் இல்லன கூறுரென்றற்கன்றே நாடகமென்னுது வழக்கென்பாராயிற்றென்பது.

இவ்வதிகாரத்து நாடகவழக் கென்பன, புணர்ச்சி உலகிற்குப் பொதுவாயினும் மலைசார்ந்து நிகழுமென்றும், காலம் வரைந்தும், உயர்ந்தோர் காமத்திற் குரியன வரைந்தும், மெய்ப்பாடுதோன்றப் பிறவாறுங் கூறுஞ் செய்யுள் வழக்காம். இக்கருத்தானே 'முதல் கரு வுரிப்பொரு ளென்ற மூன்றே - நுவலுங் காலை' (3) என்று புகுந்தார் இவ்வாசிரியர்.

இப்புலனெறி வழக்கினை இல்லது இனியது புலவரானுட்டப்பட்ட தென்னுமோவெனின், இல்லது என்று கேட்டோர்க்கு மெய்ப்பாடு பிறந்து இன்பஞ்செய்யாதாகலானும் உடன் கூறிய உலகியல் வழக்கத்தினை ஒழித்தல் வேண்டுமாகலானும் அது பொருந்தாது. அல்லதூஉம் அங்ஙனங்கொண்ட இறையனூர் களவியலுள்ளும்,

"வேந்துவினை யியற்கை பார்ப்பார்க்கு முரித்தே"

(இறையனார் - 37.)

"அரச ரல்லா வேனை யோர்க்கும்
புரைவ தென்ப வோரிடத் தான"

(இறையனார் - 38.)

எனவும்,

"வேந்தற் குற்றுழிப் பொருட்பிணிப் பிரிவென்

றாங்கவ் விரண்டு மிழிந்தோர்க் குரிய."

(இறையனார் - 39.)

எனவும் நான்கு வருணமுங் கூறி நால்வகைத் தலைமக்களையும் உணர்த்தலின் இல்லதென்பது தொல்லாசிரியர் தமிழ் வழக்கன்றெனை மறுக்க. இக்கருத்தானே மேலும் 'மக்கணுதலிய வகனைந் திணையும்' (54) என்பர். (ருக)



**54.** மக்க ணுதலிய வகனைந் திணையுஞ்
சுட்டி யொருவர் பெயர்கோளப் பெறுஅர்.

இது முற்கூறிய புலனெறி வழக்கிற்குச் சிறந்த ஐந் திணைக்காவதோர் வரையறை கூறுகின்றது.

இதன் பொருள் :—மக்கள் நுதலிய அகன் ஐந்திணை யும் - மக்களே தலைமக்களாகக் [1]கருதுதற்குரிய நடுவணைந் திணைக்கண்ணும், சுட்டி ஒருவர் பெயர் கொளப் பெறார் - திணைப்பெயராற் கூறினன்றி ஒருவனையும் ஒருத்தியையும் விதந்து கூறி அவரது இயற்பெயர் கொள்ளப்பெறார் என்ற வாறு.

இது [2]நாடக வழக்குப்பற்றி விலக்கியது. அவை பன் துறைவன் கொடிச்சி கிழத்தி யெனவரும்.
வெற்

'மக்கள் நுதலிய' என்பதனானே மக்களல்லாத தேவரும் நரகருந் தலைவராகக் கூறப்படாரெனவும், 'அகனைந்திணையும்' என்றதனானே கைக்கிளையும் பெருந்திணையுஞ் சுட்டி ஒருவர் பெயர் கொண்டுங் கொள்ளாதும் வருமெனவுங் கொள்க. 'அகனைந்திணை' எனவே அகமென்பது நடுவுநின்ற ஐந்திணை

(பி - ம்)—[1]வருதற்குரிய.

[2]சிந்தா - சுரமஞ்சரி - 69. 'கலைபுறஞ் சூழ்ந்த வல்குற் கார்மயிற் சாயலாளும், மலைபுறங் கண்டமார்பின் வாங்குவிற் றடக்கையானும், இலைபுறங் கண்ட கண்ணி இன்றமிழ் இயற்கையின்பம், நிலைபெற நெறியிற் றுய்த்தார் நிகர்தமக் கிலாத நீரார்' இது சுட்டியொருவர் பெயர் கொள்ளப்படுதலின் உலகியல் வழக்கான கந்தருவமாம்' நச்.

ஷை துணமாலை - 149. 'ஓலைதாழ் பெண்ணை மாமடலூர் தலைக், காலை வேற்றடங்கண்ணி கருதினள்' ஈண்டுக் கூறியது புல னெறி வழக்கமல்லாத காந்தருவமாய் அசுரத்தின் பாற்படும் கைக் கிளையாதலின் மெய்ப்பாட்டின் பொருள்களை முறையிற் கூறாது மயங்கக் கூறினர். எ - து. நச். உரை.

ஷை பதுமை - 163. 'தேவர் பண்ணிய தீந்தொடையின் சுவை, மேவர் தென்றமிழ் மெய்ப்பொருளாதலின், கோவத்தன்ன மென் சீறடிக் கொம்பனாள், பூவர்சோலை புகுவலென் றெண்ணினன்' தீந்தொடை - யாழ். மேவரு தமிழ் - நாடகவழக்கும் உலகியல் வழக்கும் பொருந்துதல் வரும் அகப்பொருள். மெய்ப்பொருள் என்றது முதற் கந்தருவமன்றி சுட்டி யொருவர் பெயர் கொளப்பட்டு ஐந்து



யாதலிற் கைக்கிளையும் பெருந்திணையும் அவற்றின் புறத்து நிற்றலின் அகப்புறமென்று பெயர் பெறுதலும் பெற்றாம்.[1]

இனி, அவை வரையறையுடைமை மேலைச் தான் அறிக.

சூத்திரத்·

"கன்றுமுண்ணாது கலத்தினும் படாது
நல்லான் றீம்பா னிலத்துக் . . . கவினே."

(குறு - 27.)

இது வெள்ளிவீதியார் பாட்டு.

"மள்ளர் குழீஇய விழவி னானும்
. . . மகனே." (குறு - 31.)

இது [2]காதலற்கெடுத்த ஆதிமந்தி பாட்டு.

இவை தத்தம் பெயர்கூறிற் புறமாமென் றஞ்சி

வாளாது கூறினார்.

---

நிலம்பெற்ற கந்தருவமாகிய உலகியல் வழக்கான இயற்கைப் புணர்ச்சியை...முதற் கந்தருவ மன்மையின் எண்ணினன் என்றார்.நச்.உரை.

ஷை. பதுமை - 181. 'மயற்கையில்லவர் மன்றலின்

மன்னிய,

இயற்கை யன்புடையா ரியைந்தார்களே' கந்தருவ மணம்போலே முன்பே மன்னிய இயற்கைப் புணர்ச்சியாலுள்ள அன்பையுடையார்.

நச். உரை.

**நெடுநல்வாடை.** இப்பாட்டு சுட்டியொருவர் பெயர் கொள்ளாமையின் அகப்பொருளாமேனும் 'வேம்பு தலையாத்த நோன்காழெஃகம்' என அடையாளப்பூக் கூறினமையின் அகமாகாதாயிற்று.

நச. உரை.

**களவியல் - 5. 6. உரை.** முதற் கந்தருவமார்க்கம் ஐந்துமேயன்றி அவற்றொடு பொருத்தமுடைய கந்தருவம் இவ்வைந்தும்.

சிந்தா. நாம-158. 'மருமகன் வலந்ததும் மங்கை யாக்கமும், அருமதிச் சூழ்ச்சியி னமைச்சர் எண்ணிய, கருமமும் கண்டவர் கலத்தற் பான்மையின், பெருமகற் சேர்த்தினார் பிணையனாளையே' 'முன்னர் மூன்றும்............பின்னர் நான்கும் பெருந்திணை பெறுமே' என்றதனால் ஒப்பும் பெருந்திணைப்பாற்படும் காந்தருவம் ஆமாறு பெறும் பொருளான் உணர்க.

---

[1]'புறத்திணை மருங்கின்' (சூ. 54.) இளம்பூரணர் குறிப்பு :— 'ஒருவர்க் குரித்தாகி வரும் பெயர் அகத்திணைபற்றிக் கைக்கிளை பெருந்திணையினும் வரப்பெறாது' என்பது.

[2]'காதலற் கெடுத்த - வாதி மந்திபோல' அகம் - 236.



ஆதிமந்தி தன்பெயரானும் காதலனாகிய ஆட்டனத்தி பெயரானும் கூறிற் காஞ்சிப்பாற்படும்.

" ஆதி மந்தி போல
வேதஞ் சொல்லிப் பேதுபெரி துறலே"

(அகம் - 236.)

எனவும்,

" வெள்ளி வீதியைப் போல நன்றுஞ்
செலவயர்ந் திசினால் யானே" (அகம் - 147.)

எனவும், அகத்திணைக்கட் சார்த்துவகையான் வந்தன வன்றித் தலைமைவகையாக வந்தில என்பது.

வருகின்ற சூத்திரத்துப் 'பொருந்தின்' (55)

இலேசானே இச்சார்த்துவகை கோடும்.

என்னும்

இது பெயரெனப்பட்ட கருப்பொருளாதலிற் கூற்றிற்கு உரிய தோழியும் பாங்கனும் முதலிய வாயிலோரையும் பொதுப்பெயரானன்றி இயற்பெயர்த்தொடக்கத்தன கூறப் பெறுரென்று கொள்க. உதாரணம் :—

"முகிழ்முகிழ்த் தேவர வாயினு முலையே
யரவெயிற் றொடுக்கமொ டஞ்சுதக் கனவே
களவறி வாரா வாயினுங் கண்ணே
நுழைநுதி வேலி னேக்கரி யவ்வே
யிளைய ளாயினு மணங்குதக் கிவளே
முளையிள நெருப்பின் முதுக்குறைந் தனளே
யதனு, ஞேயில ளாகுக தில்ல
சாயிறைப் பணைத்தோ ளீன்ற தாயே."

இது சுட்டி ஒருவர் பெயர்கொள்ளாக் கைக்கிளை.

"ஆள்வினை முடித்த வருந்தவ முனிவன்
வேள்வி போற்றிய விராம னவனொ[டு]
மிதிலை மூதூ ரெய்திய ஞான்றை
மதியுடம் பட்ட ம[ட]க்கட் சீதை
கடுவிசை வின்ஞா ணிடியொலி கேளாக்

கேட்ட பாம்பின் வாட்ட மெய்தித்
துயிலெழுந் து மயங்கின ளதாஅன்று மயிலென
மகிழ் . . ."

இது சுட்டி ஒருவர்பெயர் கொண்ட கைக்கிளை.

இஃது அசுரமாகலின், 'முன்னைய
என்றதனாற் கோடும்.

மூன்றுங் கைக்கிளை' அகத். ருச]



• [1]'யாமத்து மெல்லையும்' என்றது சுட்டி ஒருவர் பெயர் கொள்ளாப் பெருந்திணை.

"பூண்டாழ் மார்பிற் பொருப்பிற் கோமான்
பாண்டியன் மடமகள் பணைமுலைச் சாந்தம்
வேறு தொடங்கிய [2]விசய னெஞ்சத்
தாரழ லாற்று தைஇ யோகியிற்
பொதியிற் சாந்த மெல்லாம் பொருதிரை
முத்தினு முழங்கழற் செந்தீப்
பொத்துவது போலும் புலம்புமுந் துறுத்தே."

இது சுட்டி ஒருவர் பெயர்கொண்ட பெருந்திணை.

இவை சான்றோர் செய்யுளுட் பெருவாவிற்றன்மையி னன்றே முற்சூத்திரத்து முன்னும் பின்னும் இவற்றை வைத்ததென்பது.

" முட்காற் காரை முதுகனி யேய்ப்பத்
தெறிப்ப விளைந்த தீங்கட் டார
நிறுத்த வாயந் தலைச்செல வுண்டு
பச்சூன் றின்று பைந்நிணம் பெருத்த
வெச்சி லீர்ங்கை விற்புறந் திமிரிப்

புலம்புக் கனனே புல்லணற் காளை
யொருமுறை யுண்ணா வளவைப் பெருநிரை
யூர்ப்புற நிறையத் தருகுவன் யார்க்குந்
தொடுத லோம்புமதி முதுகட் சாடி
யாதரக் கழுமிய துகளன்
காய்தலு முண்டக் கள்வெய் யோனே" (புறம் - 258.)

இது வெட்சித்திணை பெயர்கொள்ளாது வந்தது.

" முலைபொழி தீம்பான் மண்சேறு படுப்ப
மலர்தலை யுலக மோம்பு மென்ப
பாசிலைத் தொண்டைப் பல்லவ ஞெயின்
வெட்சித் தாயத்து வில்லே ருழவர்
பொருந்தா வடுகர் முனைச்சுரங்
[3]கடந்து கொண்ட பல்லா னிரையே."

இது வேந்துவிடு தொழிற்கண் வேந்தனைப் பெயர் கூறிற்று. ஒழிந்தனவும் புறத்திணையியலுட் காண்க. (ருச)

---

[1]கலி - 139. (பி - ம்)—[2]விஞ்சையர். [3]காந்து.

## 55.

**புறத்திணை மருங்கிற் பொருந்தி னல்ல**
**தகத்திணை மருங்கி னளவுத லிலவே.**

இது புறத்திணைக்குத் தலைவர் ஒருவராதலும் பலராதலும் உரிப்பொருட்குத் தலைவர் பலராகாமையுங் கூறலின் எய்தாததெய்துவித்து எய்தியது விலக்கிற்று.[1]

இதன்பொருள் ,—அகத்திணை மருங்கிற் பொருந்தின் - ஒருவனையும் ஒருத்தியையும் விதந்துகூறும் இயற்பெயர் அகத்திணைக் கண்ணே வந்து பொருந்துமாயின், புறத்திணை அளவுதல் மருங்கின் அல்லது இல - ஆண்டும் புறத்திணை கலத்தலிடத்தினல்லது வருதலில்லை என்றவாறு.

எனவே, புறத்திணை கருப்பொருளாயும், அதுதான் உவமமாயும் அகத்திணையுட் கலக்குமென்பதூஉம் இதனனே விரித்தாராயிற்று. அளவுமெனவே ஒருசெய்யுட்கண்ணும் அப்புறத்திணையாகிய இயற்பெயர்களும் சிறப்புப்பெயர்களும் ஒன்றேயன்றிப் பலவும் வருதலுங் கொள்க. ஒருவரென்பது அதிகாரப்பட்டமையின் அகத்திற்குவரும் உரிப்பொருட் பெயர் ஒன்றுதல் கொள்க.

உதாரணம் :—'வண்டுபடத் ததைந்த' என்னும் அகப் பாட்டினுள்,

"முருக னற்போர் நெடுவே ளாவி
. . . யாங்கண்." (அகம் - 1.)

எனவே புறத்திணைத்தலைவன் இயற்பெயர் ஒன்றே வந்த வாறும் அவன் நிலக் கருப்பொருளாய் அகத்திற்கு வந்த வாறும் உரிப்பொருட்டலைவன் ஒருவனேயானவாறுங்காண்க.

"எவ்வி யிழந்த வறுமையர் பாணர்
பூவில் வறுந்தலை போலப் புல்லென்று." (குறு -
19.)

என்பது கருப்பொருளுவமமாய் வந்தது.

[2]'கேள்கே டூன்றவும்' என்னும் அகப்பாட்டுப் புறத்திணைத் தலைவர் பலராய் அகத்திணைக்கண் அளிவந்தது. புறத்திணைக்கண் இயற்பெயர் அளிவரும் என்பதனானே

[1]'ஒருவர் பெயர் புறத்திணை மருங்கிற் பொருந்தினல்லது, அகத்திணை மருங்கின் வருதல் இல்லை' யென்பது இளம்பூரணர் குறிப்பு. [2]அகம். 93.



[1]'முரசுகடிப் பிகுப்பவும் வால்வளை துவைப்பவும்' என்னும் புறப்பாட்டு 'எழுவர் மாய்ந்த பின்றை' எனப் புறத்திணைத் தலைவர் பலராய் வந்தது.

பிறவும் இவ்வாறு வருவன இதனுன் அமைக்க.

இன்னும் இதனானே அகப்புறமாகிய கைக்கிளை பெருந்திணைக்கும் இப்பன்மை சிறுபான்மை கொள்க. உதாரணம்:-

" ஏறும் வருந்தின வாயரும் புண்கூர்ந்தார்
நாறிருங் கூந்தற் பொதுமகளி ரெல்லாரு
முல்லையந் தண்பொழில் புக்கார் பொதுவரோ
டெல்லாம் புணர்குறிக் கொண்டு." (கலி - 101.)

'பொருந்தின்' எனவே தானும் தன்னொடு பொருந்து வதூஉம் என இரண்டாக்கிச் சார்த்துவகையான் வரும் பெயர்க்குங் கொள்க. நாடகவழக்கி னுளது முன்னர்ச் சூத்திரத்துட் காட்டினும்.[2]

பெயர்கள் [3]பலவாதலின் இலவெனப்

பன்மை கூறி

னார்.

(௫௫)

முதலாவது அகத்திணையியற்கு
ஆசிரியர் - பாரத்துவாசி - நச்சினார்க்கினியர் செய்த
காண்டிகையுரை

முடிந்தது.

---

[1]புறம் - 158.

[2]'அகத்திணைக்கட் சார்த்துவகையான் வந்தனவன்றித் தலைமை வகையாக வந்தில வென்பது. வருகின்ற சூத்திரத்துப் பொருந்தின் என்ற இலேசானே இச்சார்த்துவகை கோடும்' என்றார். (தொல் - பொ - 54.) (பி - ம்)—[3]பலவென்பதுபற்றி.

உ

## இரண்டாவது

# புறத்திணையியல்



**56.** அகத்திணை மருங்கி னரிறப வுணர்ந்தோர்
புறத்திணை யிலக்கணந் திறப்படக்
கிளப்பின்
வெட்சி தானே குறிஞ்சியது புறனே
யுட்குவரத் தோன்று மீரேழ் துறைத்தே.

*இவ்வோத்து முற்கூறிய அகத்திணை ஏழற்கும் புறமாகிய புறத்திணையிலக்கணம் உணர்த்தினமையிற் புறத்திணையியலென்னும் பெயர்த்தாயிற்று. புறமாகிய திணையெனப் பண்புத்தொகையாம். அதனை 'முற்படக் கிளந்த' (1) என்புழிப் பிற்படக் கிளந்தனவும் உளவெனத் தோற்றுவாய் செய்துபோந்து அவற்றது இலக்கணங்களும் பெயரும் முறையுந் தொகையும் வருகின்ற சூத்திரங்களால் 'திறப்படக் கிளப்பின்' எனக் கூறலின் மேலதனோடு இயைபுடைத்தாயிற்று.*

*இச்சூத்திரம் முற்கூறிய குறிஞ்சித்திணைக்குப் புறன் வெட்சித்திணை என்பதூஉம் அது தான் இப்பகுதித்தென்பதூஉம் உணர்த்துதல் நுதலிற்று.*

இதன் பொருள் :—அகத்திணை மருங்கின் அரில் தப உணர்ந்தோர் புறத்திணை இலக்கணம் திறப்படக் கிளப்பின் - அகத்திணை யென்னும் பொருட்கட் பிணக்கற அறிந்தோர் கூறிய புறத்திணையது இலக்கணத்தைக் கூறுபட ஆராய்ந்து கூறின், வெட்சி தானே குறிஞ்சியது புறனே - வெட்சி யெனப்பட்ட புறத்திணை குறிஞ்சி யெனப்பட்ட அகத்திணைக்குப் புறனும், உட்குவரத் தோன்றும் ஈரேழ் துறைத்தே - அது தான் அஞ்சுதகத் தோன்றும் பதினன்கு துறையினையுடைத்து என்றவாறு.

அகத்திணைக்கண் முதல் கரு வுரிப்பொருள் கூறிய குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் என்பனவற்றிற்கு வெட்சி வஞ்சி உழிஞை தும்பை யென்பன அவ்வவ்விலக்



கணங்களோடு ஒருபுடையொப்புமைபற்றிச் சார்புடையவாத லும், நிலமில்லாத பாலை பெருந்திணை கைக்கிளை யென் பனவற்றிற்கு வாகையும் காஞ்சியும் பாடாண்டிணையும் பெற்ற இலக்கணத்தோடு ஒருபுடையொப்புமைபற்றிச் சார் புடைய வாதலும் கூறுதற்கு 'அரிறபவுணர்ந்தோர்' என்றார். ஒன்று ஒன்றற்குச் சார்பாமாறு அவ்வச்சூத்திரங்களுட் கூறுதும். 'தானே' யென்றார் புறத்திணை பலவற்றுள் ஒன்றை வாங்குதலின். பாடாண்டிணை யொழிந்தனவற்றிற்கும் இஃ தொக்கும்.

களவொழுக்கமும் கங்குற்காலமும் காவலர் கடுகினுந் தான் கருதிய பொருளை இரவின்கண் முடித்து[1] மீடலும் போல்வன ஒத்தலின் வெட்சி குறிஞ்சிக்குப் புறனென்றார். வெட்சித்திணையாவது களவின்கண் நிரைகொள்ளும் ஒழுக்கம்: இதற்கு அப்பூச் சூடுதலும் உரித்தென்று கொள்க. வேற்றுப்புலத்து வாழும் பார்ப்பார் முதலியோர் அஞ்சி அரண் சேர்வதோர் உபாயமாதலின் 'உட்குவரத் தோன்றும்' என்றார்.

மக்களும் மாவும் முதலியன சென்று நீருண்ணுந் துறை போலப் பலவகைப்பட்ட பொருளும் ஒருவகைப்பட்டு இயங்குதலாகு மார்க்கமாதலின் 'துறை' யென்றார்; எல்லா வழியுமென்பதனை 'எல்லாத்துறையுங் காவல் போற்றினர்' என்பவாகலின். எனவே, திணையுந் துறையுங் கொண்டாராயிற்று. அகத்திணைக்குத் துறைபட் பகுதிகளெல்லாம் விரித்துக்கூறிப் பின்னும் பன்முறையாற் [2]பரந்துபட்டு வரம்பிகந்தனவற்றையுந் தொகுத்துத் துறைப்படுத்துக் கிளவி கூறுக என்றற்குச் செய்யுளியலுள் (313) துறையென்பது உறுப்பாகக் கூறினார். புறத்திணைக்கு அங்ஙனம் பரந்துபட விரித்தோதாது தொகுத்து இலக்கணஞ் செய்தாராயினும் அவையும் அவ்வாறே பலபொருட்பகுதியும் உடையவென்பது உணர்த்துதற்குத் துறையெனப் பெயராகக் கொடுத்தார். இதனானே அகப்பொருட்பகுதி பலவாயினும் ஒரு செய்புளுட் பலபொருள் விராஅய் வரினும் ஒரு துறையாயினற்

(பி - ம்)—[1]மீட்டலும். [2]பரந்தனவாய்.

போலப் புறத்திணைக்கும் அவ்வப்பொருட்பகுதியும் ஒரு துறையாதலும் ஒரு செய்யுளுட் பலதுறை ஒருங்குவந்தும் ஒருதுறைப்படுதலுங் கொள்க.

இன்னும் இதனானே அகத்திணைக்கு உரியனவெல்லாம் புறத்திணைக்குங் கொள்க. (க)

**57.** வேந்துவிடு முனைஞர் வேற்றுப்புலக் களவி
னாதந் தோம்பன் மேவற் றாகும்.

இது வெட்சியெனக் கூறிய புறத்திணைக்குப் பொது

இலக்கணங் கூறுகின்றது.

இதன் பொருள்:—வேந்து விடு முனைஞர் - வேந்தனால் விடப்பட்டு முனைப்புலங் காத்திருந்த [1]தண்டத்தலைவர், வேற்றுப்புலக்களவின் - பகைநிலத்தே சென்று களவினாலே, ஆதந்தோம்பல் மேவற்றாகும்-ஆநிரையைக் கொண்டுபோந்து பாதுகாத்தலைப் பொருந்துதலையுடைத்தாகும் வெட்சித்திணை

என்றவாறு.

களவு நிகழ்கின்ற குறிஞ்சிப்பொருளாகிய கந்தருவ மணம் வேதவிதியானே இல்லறமாயினாற்போல, இருபெரு வேந்தர் பொருவது கருதியக்கால் ஒருவர் ஒருவர்நாட்டு வாழும் அந்தணரும் ஆவும் முதலியன தீங்குசெய்யத் தகாத சாதிகளை ஆண்டுநின்றும் அகற்றல்வேண்டிப் போதருக வெனப் புகறலும், அங்ஙனம் போதருதற்கு அறிவில்லாத ஆவினைக் களவினால் தாமே கொண்டுவந்து பாதுகாத்தலுந் தீதெனப்படாது அறமேயாம் என்றற்கு 'ஆதந்தோம்பல்'

எனரூா. அது,

"ஆவு மானியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரு
மெம்மம்பு கடிவிடுது நும்மரண் சேர்மினென
வறத்தாறு நுவலும் பூட்கை மறத்தின்" (புறம் -
9.)

எனச் சான்ேறார் கூறியவாற்றுனுணர்க.

மன்னுயிர் காக்
கும் அன்புடை வேந்தற்கு மறத்துறையினும் அறமேநிகழும்

[1] தண்டலைத் தலைவர் என்ற பாடமே எட்டுப் பிரதிகளில் உள்ளது.

என்றற்கு 'மேவற்றாகும்' என்றார். அகநாட்டன்றிப் புறஞ் சிறைப்பாடியில் ஆநிரை காக்குங் காவலரைக் கொன்றே நிரை கொள்ள வேண்டுதலின் [1]ஊர்கொலையுங் கூறினார். வேந்துவிடு வினைஞர் என்னாது முனைஞர் என்றதனானே, முனைப்புலங் காத்திருந்தோர் தாமே சென்று நிரைகோடலுங் குறுநிலமன்னர் நிரைகோடலும் ஏனைமறவர் முதலியோர் நிரைகோடலு மாகிய வேத்தியல் அல்லாத பொதுவியலுங் கொள்க. முன்னர் (56)வெட்சி குறிஞ்சிக்குப் புறனெனக் களவுகூறிய அதனானே, அகத்திற்கு ஏனைத்திணைக்கண்ணுங் களவு நிகழ்ந்தாற்போலப் புறத்திணை யேழற்குங் களவுநிகழுங்கொ லென்று ஐயுற்ற மாணாக்கற்கு வெட்சிக்கே களவு உள்ளதென்று துணிவுறுத்தற்கு மீட்டுங் 'களவின்' என்று இத்திணைக்கே களவு உளதாக வரைந்தோதினார். 'வேந்துவிடு முனைஞர்' என்றமையான் இரு பெருவேந்தருந் தண்டத்தலைவரை ஏவி விடுவரென்றும், 'ஆதந்தோம்பும்' என்றதனாற் களவின்கட் கொண்ட ஆவினை மீட்டுத் தந்தோம்புமென்றும் பொருள் கூறுமாறு சூத்திரஞ் செய்தாராகலின் இருபெருவேந்தர் தண்டத்தலைவரும் அவரேவலான் நிரைகோடற்கும் மீட்டற்கும் உரியராயினர்; ஆகவே இருவர்க்குங் கோடற்றொழில் உளதாயிற்றாதலின் அடித்துக் கோடலும் மீட்டுக் கோடலும் வெட்சியாயின.

ஆயின் [2]'மீட்டல் கரந்தை' என்பாரால் எனின், அதனையும் இச் சூத்திரத்தானும் வருகின்ற சூத்திரத்தானும் வெட்சியென்றே ஆசிரியர் கொண்டார். மீட்டலை வெட்சிக்கரந்தை

[1]'ஊர்கொலை யாகோள் பூசன்மாற்றே.' (58) ஊர்கொலை:—

"விரைபரி கடவி வில்லுடை மறவர்

குரையழ னடப்பக் குறம்பெறிந் தன்று." (பு - வே - 1, 8.) [2]"வெட்சி நிரைகவர்தன் மீட்டல் காந்தையாம்
வட்கார்மேற் செல்லுதல் வஞ்சியா—முட்கா
தெதிரூன்றல் காஞ்சி யெயில்காத்த னொச்சி
யதுவளைத்த லாகு முழிஞை-யதிரப்
பொருவது தும்பையாம் போர்க்களத்தி லொன்னார்
செருவென் றதுவாகை யாம்."

மீட்டல் காந்தை யென்றார் இளம்பூரணரும்.



என்பாரும் உளர். மீட்டலைக் காந்தையென்பார்க்கு திணையாயிற் குறிஞ்சிக்குப் புறனாகாமை உணர்க. அது

'களவின்' என்பதற்குக் களவினானெனவுங் களவின்கணெனவும் இரு பொருட்டாகக் கூறுதல் உய்த்துக்கொண்டுணர்தல் (665) என்னும் உத்தியாம். புறப்பொருட்குரிய அறனும் பொருளுங் கூறத்தொடங்கி ஈண்டு அறத்தாற் பொருளீட்டுமாறுங் கூறினர். (உ)

**58.** படையியங் கரவம் பாக்கத்து விரிச்சி
புடைகெடப் போகிய செலவே புடைகெட

வோற்றி ஞகிய வேயே வேய்ப்புற
முற்றி ஞகிய புறத்திறை முற்றிய
வூர்கொலே யாகோள் பூசன் மாற்றே
நோயின் றுய்த்த [1]ஞுவலுழித் தோற்றந்
தந்துநிறை பாதீ டுண்டாட்டுக் கொடையென

வந்த வீரேழ் வகையிற் ருகும்.

*இது முன் ஈரேழாமென்ற துறை*

*இருவகைப்பட்டு இரு பத்தெட்டாமென்கின்றது.*

*இதன்பொருள் :—[2]படை இயங்கு அரவம் - நிரைகோடற்கு எழுந்த படை பாடிப்புறத்துப் பொருந்தும் அரவ*

---

*(பி - ம்)—[1]ஞுவலுவழித்.*

*[2]படையியங்கரவம் முதலியவற்றை நிரைகோடற்கு எழுந்த படைக்குமாத்திரம் உரியவாக்குவர் இளம்பூரணர்; மீட்டற் படைக் குக் காட்டிலர். வெட்சி இருவகை என்பது அவர்க்குக் கருத்தன்று; வெட்சி காந்தையென இரண்டும் குறிஞ்சித்திணைப் புறம் என்பர்.*

*சிவஞானமுனிவர் பாயிரவிருத்தி :—அகம் புறம் எனப் பகுத்த வற்றைத் தம்முள் வேறுபாடு நோக்கி அகம் அகப்புறம் புறம் புறப் புறம் என நான்காகப் பகுத்தலும், வெட்சித்திணை உழிஞைத்திணை களின் மறுதலேவினையை வீற்றுவினையாதலும் வேற்றுப் பூச் சூடுத லும் ஆகிய வேறுபாடுபற்றி வேறு திணையாக வைத்தெண்ணுதலும், இன்னோரன்னவை பிறவுமாம். இங்ஙனம் வேறுபடினும்...பொருண் முடிபும் வேறுபடாமையின், மரபுநிலை திரியாவாயின. இவ்வுண்மை*

மும், நிரைமீட்டற்கு எழுந்த படை விரைந்து செல்லும் அரவமும: உதாரணம :—

“வெவ்வாண் மறவர் மிலைச்சிய வெட்சியாற்
செவ்வானஞ் செல்வதுபோற் செல்கின்ற—ரெவ்வாயு
மார்க்குங் கழலொலி யாங்கட் படாலியரோ
போர்க்குக் துடியோடு புக்கு.”

(பெரும்பொருள் விளக்கம் : புறத்திரட்டு - 752.)

“அடியதி ரார்ப்பின ராபெயர்த்தற் [1]கண்ணு
கடிய மறவர் கதழ்ந்தார்—[2]மடிநிரை
மீளாது மீளார் விறல்வெய்யோர் யாதாங்கொல்
வாளார் துடியர் வலம்.” (ஷை 763.)

இவை கண்டோர் கூற்று.

பாக்கத்து விரிச்சி-நிரைகோடற்கு எழுந்தோர் போந்து விட்ட பாக்கத்துக் கங்குலில் நல்வாய்ப்புட் கேட்டலும், நிரை மீட்டற்கு எழுந்தோர் இடைப்புலத்துப் புறம்போந்தோர் கூறியவற்றை வாய்ப்புள்ளாகக் கேட்டலும் : உதாரணம் :—

"திரைகவுள் வெள்வாய்த் திரிந்துவீழ் [3]தாடி
நரைமுதியோ னின்றுரைத்த நற்சொ—னிரையன்றி
யெல்லைநீர் வைய மிறையோர்க் களிக்குமால்
[4]வல்லைநீர் சென்மின் வழி."

(பெரும்பொருள் விளக்கம்: புறத்திரட்டு - 756.)

"வந்தநீர் காண்மினென் றுபெயர்ப்போர் மாட்டிசைத்த
பைந்தொடியார் கூறும் பறவாப்பு—ளுய்ந்த
நிரையளவைத் தன்றியு நீர்சூழ் கிடக்கை
வரையளவைத் தாவதா மண்."

இவை விரிச்சியை வியந்தன.

புடைகெடப் போகிய செலவே - நிரைகோடற்கு எழுந்தோர் ஆண்டுநின்று மீண்டுபோய்ப் பற்றார் புலத்து ஒற்றர்

யுணராதார் பன்னிருபடலம் முதலிய நூல்களை வழீஇயின வென்றிகழ்ந்து பன்னிருபடலத்துள் வெட்சிப்படலம் தொல்காப்பியனார் கூறியதன்றெனவும், தொல்லாசிரியர் வழக்கொடு முரணித் தமக்கு வேண்டியவாறே கூறுப.

(பி - ம்)—[1]கன்னாய். [2]படிநிரை. [3]தாழ்தாடி. [4]வல்லையே.



உணராமற் பிற்றைஞான்று சேறலும், நிரைமீட்டற்கு எழுந்தோர் ஆண்டு ஒற்றப்படாமற் சேறலும்: உதாரணம்:—

"பிறர்புல [1]மென்னார் தமர்புல மென்னார்
விறல்வெய்யோர் [2]வீங்கிருட்கட் சென்றார்—நிறையுங்
கடாஅஞ் செருக்குங் கடுங்களி யானைப்
படாஅ முகம்படுத் தாங்கு."

(பெரும்பொருள் விளக்கம் : புறத்திரட்டு - 757.)

"கங்கை பரந்தாங்குக் கானப் பெருங்கவலை
யெங்கு மறவ ரிரைத்தெழுந்தார்—தங்கிளைக்கண்
மன்றுகாண் வேட்கை மடிசுரப்ப வேதோன்றுங்
கன்றுகாண் மெய்குளிர்ப்பீர் கண்டு." (ஷை. 764.)

இவை கண்டோர் கூற்று.

புடைகெட ஒற்றின் ஆகிய வேயே - நிரைகோடற்கு எழுந்தோர் பகைப்புலத்து ஒற்றர் உணராமற் சென்று ஒற்றி அவ்வொற்றுவகையான் அவர் உணர்த்திய குறிப்பிற்சொல்லும், நிரைமீட்டற்கு எழுந்தோர் அங்ஙனம் ஒற்றிய ஒற்றுவகையான் வந்து ஓதிய குறிப்பிற் சொல்லும் : உதாரணம் :—

"ஒருவ ரொருவ ருணராமற் சென்றாங்
கிருவரு மொப்ப விசைந்தார்—வெருவர
வீக்குங் கழற்கால் விறல்வெய்யோர் வில்லோடு
கோக்குஞ் சரந்தெரிந்து கொண்டு."

"நெடுநிலையா யத்து [3]நிரைசுவ டொற்றிப்
படுமணி யாயம் பகர்ந்தோய்—கொடிது
மன்க்குரிய காதல் வயவேந்த னென்று
நினக்குரிய வாக நிரை."

இவை கண்டோர் கூற்று.

வேய்ப்புறம் முற்றின் ஆகிய புறத்திறை - நிரைகோடற்கு எழுந்தோர் வேயுரைத்தோரிடத்துச் செய்யுஞ் சிறப்புக்கள் முடிந்தபின்னர் உளதாகிய நிரைப்புறத்து ஒடுங்கிய இருக்கைப்பகுதியும், நிரைமீட்டற்கு எழுந்தோர் தமது

(பி - ம்)—[1]மென்னார்தாக் தம்புல. [2]ஆயிருட்கட். தோற்றிப்.



நிரைப்புறத்துச் சென்று விரைவொழிந்து இருக்கின்ற இருக் கையும்; உதாரணம் :—

"காந்தியல் காட்டுத்தீப் போலப் பெரிதும்
பாந்துசென் மள்ளர் பதிந்தா—ராந்தை
விரிந்தவியு மாறுபோல் விண்டோயத் தோன்றி
யெரிந்தவியும் போலுமிவ் வூர்."

இது கண்டோர் கூற்று.

"இருநில மருங்கி னெப்பிறப் பாயினு
மருவின் மாலையோ வினிதே யிரவி
னுகோண் மள்ளரு மருள்வரக் கானத்து
நாம்புறத் திறுத்தென மாகத் தாந்தங்
கன்றுகுரல் கேட்டன போல
நின்றுசெவி யோர்த்தன சென்றுபடு நிரையே."

(தகடூர் யாத்திரை : புறத்திரட்டு - 765.)

இது மறவர் கூற்று.

முற்றிய ஊர்கொலை - நிரைகோடற்கு எழுந்தோர் அவர் புறஞ்சேரியை வளைத்துக்கொண்டு ஆண்டுநின்ற நிரைகாவலரைக் கொன்று பகையறுத்தலும், நிரைமீட்டற்கு எழுந்தோர் அவ்வூரை விட்டுச் சிற்றூரைக் காத்துக்கோறலும்: உதாரணம் :—

" ஆரூர் மதியிற் கரிதார வீம
விரவூ ரெரிகொளீஇக் கொன்று—நிரைநின்ற
பல்லான் றொழுவம் பகற்காண்மார் போர்கண்டோர்
கொல்வார்ப் பெருஅர் கொதித்து."

" சென்ற நிரைப்புறத்துச் சீறூர்த் தொடைகொண்டு
நின்ற மறவர் நிலஞ்சேர்ந்தார்—கொன்றுண்
டிகலுழந்த வல்வில் [1]விளையோர்புண் டீரத்
துகளெழுங்கொல் பல்லான் றொழு."

இவை கண்டோர்கூற்று.

ஆகோள் - நிரைகோடற்கு எழுந்தோர் எதிர்விலக்குவோர் [2]இலராக நிரையகப்படுத்தி மீட்டலும், நிரைமீட்

(பி - ம்)—[1]விளையோன்புண் டீர்ந்து. [2]இலராக்கி. 



எழுந்தோர் தமது நிரையை அற்றமின்றி மீட்டலும் : உதாரணம் :—

"கொடுவரி கூடிக் குழூஉக்கொண் டனைத்தா
னெடுவரை நீள்வேய் நரலு—நடுவூர்க்
கணநிரை கைக்கொண்டு கையகலார் நின்ற

நிணநிரை வேலார் நிலை." (பு. வெ. 1, 9.)

"கடல்புக்கு மண்ணெடுத்த காரேனக் கோட்டின்
மிடல்பெரி தெய்தின மாதோ—தொடலைக்
கரந்தை மறவர்க் கருதார் குழாஅந்
துரந்து நிரைமீட்ட தோள்."

(பெரும்பொருள் விளக்கம் : புறத்திரட்டு - 767.)

இவை கண்டோர் கூற்று.

'தொடலைக்கரந்தை' எனக் கரந்தை சூடினமை கூறினார் தன்னுறுதொழிலான் நிரைமீட்டலின். இது [1]பொதுவியற் கரந்தையிற் கூறுதும்.

பூசல்மாற்று - நிரை கொண்டுபோகின்றார் தம்பின்னே உளைத்தற் குரலோடு தொடர்ந்துசென்று ஆற்றிடைப் போர்செய்தோரை மீண்டு பூசலை மாற்றுதலும், நிரையை மீட்டுக்கொண்டு போகின்றோர் தம்பின்னர் வந்து போர் செய்தோரை மீண்டுநின்று பூசலை மாற்றுதலும்: உதாரணம்:-

"ஒத்த வயவ ரொருங்கவிய நாண்படாத்
தத்த மொலியுந் தவிர்ந்தன—வைத்தகன்றார்
தம்பூசன் மாற்றி நிரைகொள்வான் றாக்கினார்
வெம்பூசன் மாற்றிய வில்."

[2]" இராவூ ரெறிந்து நிரையொடு பெயர்ந்த
வெட்சி மறவர் வீழவு முட்காது
கயிறியல் பாவை போல வயிறிரித்
துளக்குாற் குணர்ந்த வளைப்புலி போல
முற்படு பூசல் கேட்டனர் பிற்பட
நிணமிசை யிழுக்காது தமர்பிண மிடறி
நிலங்கெடக் கிடந்த கருந்தலை நடுவண்

[1]'அனைக்குரி மரபினது கரந்தை யன்றியும்' (60) என்புழிக் காண்க. (பி - ம்)—[2]ஆவூ. .



[1]மாக்கட னெருப்புப் போல நோக்குபு
[2]வெஞ்சிலை விடலை வீழ்ந்தன
னஞ்சுதக் கன்றுற் செஞ்சோற்று நிலையே."

இவை கண்டோர் கூற்று.

வெட்சிமறவர் வீழ்ந்தமை கேட்டு விடாது பின்வந் தோன்பாடு கூறினமையிற் பூசன்மாற்றாயிற்று.

கோய் இன்று உய்த்தல் - நிரைகொண்டோர் அங்ஙனம் நின்று நின்று சிலர் பூசன்மாற்றத் தாங்கொண்ட நிரையினை இன்புறுத்திக் கொண்டுபோதலும், மீட்டோரும் அங்ஙனம் நின்று நின்று சிலர் பூசன்மாற்றத் தாம் மீட்ட நிரையினை இன்புறுத்திக் கொண்டுபோதலும்: உதாரணம் :—

"புன்மேய்ந் தசைஇப் புணர்ந்துடன் செல்கென்னும்
வின்மே லசைஇயகை வெல்கழலான்—றன்மேற்
கடுவரை நீரிற் கடுத்துவரக் கண்டு
நெடுவரை நீழ னிரை." (பு. வெ. 1, 11.)

"கல்கெழு சீறூர்க் கடைகாண் விருப்பினன்
மெல்ல நடவா விரையுநிரை—யொல்லெனத்
தெள்ளறற் கான்யாற்றுத் தீநீர் பருகவு
மள்ளர் நடவா வகை."

(பெரும்பொருள் விளக்கம் : புறத்திரட்டு - 768.)

இவை கண்டோர் கூற்று.

நுவலுழித் தோற்றம் - பாடிவீட்டுள்ளோர் மகிழ்ந் துரைத்தற்குக் காரணமான நிரைகொண்டோர் வரவும், ஊரி லுள்ளோர் கண்டு மகிழ்ந்துரைத்தற்குக் காரணமான நிரை மீட்டோர் வரவும்: உதாரணம் :—

"மொய்யண லானிரை முன்செல்லப் பின்செல்லு
மையணற் காளை மகிழ்துடி—கையணல்
வைத்த வெயிற்றியர் வாட்க ணிடனுடை
வுய்த்தன் றுவகை யொருங்கு." (பு. வெ. 1, 12.)

" காட்டகஞ் சென்றுயிர் போற்றான் கடுஞ்சுரையா
மீட்ட மகனை [3]வினவுறா—ளேட்டந்து

(பி - ம்)—[1]மாக்கடை நெருப்புப். [2]வெஞ்சின.
[3]வினவுமு.



தன்னெதிர் தோன்றும் புனிற்றாத் தழீஇக்கலுழு
[1]மென்னெதிர்ப் பட்டாயோ வென்று."
(பெரும்பொருள் விளக்கம்: புறத்திரட்டு - 769.)

இவை கண்டோர் கூற்று.

தந்து நிறை - நிரைகொண்டோர் தாங்கொண்ட நிரையைத் தம் ஊர்ப்புறத்துத் தந்து நிறுத்தலும், நிரைமீட்டோர் தாம் மீட்ட நிரையினைத் தந்து நிறுத்தலும்: உதாரணம்:—

" குளிறு குரன்முரசங் கொட்டின் வெரூஉங்
களிறுருடுதேர் காண்டலு மாற்றா—ளளிமணி
நல்லா னினநிரை நம்மூர்ப் புறங்கான
மெல்லாம் பெறுக விடம்."

" கழுவொடு பாகர் கலங்காமல் யாத்துத்
தொழுவிடை யாயர் தொகுமி—னெழுவொழித்தாற்
போமே [2]யிவையிவற்றைப் போற்றுமின் புல்லொடுநீர்
தாமேய் புலம்போலத் தந்து."

இவை கண்டோர் கூற்று.

பாதீடு-ஈத்தலும் ஈதலும் போலப் பாத்தலும் பாதலும் ஒன்றுதலிற் பாதீடாயிற்று: வேந்தனேவலால் தாங்கொண்ட நிரையைப் பகுத்துக்கோடலும், மீட்டோருந் தத்தநிரையைப் பகுத்துக்கோடலும், நிரையை இழந்தோர்க்குப் பகுத்துக்கொடுத்தலும்: உதாரணம்:—

" ஒள்வாண் மலைந்தார்க்கு மொற்றாய்ந் துரைத்தார்க்கும்
புள்வாய்ப்பச் சொன்ன புலவர்க்கும்—விள்வாரை
மாறட்ட வென்றி மறவர்தஞ் சீறூரிற்
கூறிட்டார் கொண்ட நிரை." (பு. வெ. 1, 14.)

" யாமே [3]பகுத்திடல் வேண்டா வினநிரை
தாமே தமரை யறிந்தனகொ—லேமுற
வன்றீன்ற தம்மை யறிந்துகொள் கன்றேய்ப்பச்
சென்றீண்டு மாங்கவர்பாற் சேர்ந்து."

(பெரும்பொருள் விளக்கம்:
புறத்திரட்டு - 770.)

இவற்றுள் முன்னையது கண்டோர் கூற்று; ஏனையது மறவர் கூற்று.

(பி - ம்)—[1]மென்னதுயர்ப். [2]யிவற்றைநீர்.

[3]பகர்ந்திட. புறத். ௩]



உண்டாட்டு - நிரைகொண்டார் தாங்கொண்ட

நிரையைப்

பாத்துத் தாங்கொண்ட மகிழ்ச்சியாற் சுற்றத்தொடு கள் ளுண்டு மகிழ்ந்து விளையாடுதலும், நிரைமீட்டார் வென்று நிரைமீட்ட கொற்றத்தான் உண்டாடுதலும்: உதாரணம்:—

"நறவுந் தொடுமின் விடையும் வீழ்மின்
பாசுவ லிட்ட பைங்காற் பந்தர்ப்
புனறரு மிளமண லிறையப் பெய்ம்மி
னொன்னார் முன்னிலை முருக்கிப் பின்னின்று
நிரையொடு வருஉ மென்னைக்
குழையோர் தன்னினும் பெருஞ்சா யலரே." (புறம்-262.)

"பகைவர் கொண்ட படுமணி யாய
மீட்டிவட் டந்த வாட்டிறற் குரிசின்
முழவுத் துயின் மறந்த மூதூ ராங்கண்
விழவுத்தலைக் கொண்ட விளையாட் டாயத்
தான்சுடு கொழும்புகைக் கருங்கொடி யும்பர்
மீன்சுடு புகையின் விசும்புவாய்த் தன்றே
கைவல் கம்மியர் பல்கூட் டாரமொடு
நெய்பிழி நறுவிரை நிலம்பாந் தன்றே
காவிற் காவிற் கணங்கொள் வண்டெனப்
பூவிலை மகளிர் புலம்பட்டார்ந் தனரே
சந்தியுஞ் சதுக்கமும் பந்தர் போகிய
வாடுறு நறவின் சாடி தோறுங்
கொள்வினை மாற்றுக் கொடையொடு
கள்விலை யாட்டியுங் கைதூ வாளே."

இவை கண்டோர் கூற்று.

கொடை - தாங்கொண்ட நிரையை இரவலர்க்கு வரையாது கொடுத்து மனமகிழ்தலும், நிரைமீட்டோர்க்கு வென்றிப்பொருட்டு விளைந்த கொடைப்பகுதியும்: உதாரணம்:—

" இளமா வெயிற்றி யிவைகாணின் னையர்
தலைநாளை வேட்டத்துத் தந்த நிரைகள்
கொல்லன் றுடியன் கொளைபுணர் சீர்வல்ல
நல்லியாழ்ப் பாணர்த முன்றி னிறைந்தன."

(சிலப். வேட்டுவவரி.)

"கொடைத்தொழி லெல்லாங் குறைவின்றிப் பண்டே
முடித்தன னென்றிருந்த மூத்தோன்—கொடைக்கு



வரம்பில னென்றே மருண்டா னிரைகோட்
காந்தையங் கண்ணியாற் கண்டு."

இவை கண்டோர் கூற்று.

என ஈரேழ் வந்த வகையிற்றாகும் - என்று கூறப்பட்ட பதினான்கும் மீட்டுமொருகால் விதந்த இருகூற்றை யுடைத்தாகும் வெட்சித்திணை என்றவாறு.

எனவே ஒன்று இரண்டாய் இருபத்தெட்டாயிற்று.

இனித் துறையென முற்கூறினமையின்
இது காரிய

மாக இதற்குக் காரணமாயினவெல்லாம் படையியங்காவ மெனவே படும். அவை இருபெரு வேந்தரும் போர்தொடங் குங்காற் பூக்கோளேவி நிரைகோடல் குறித்தோன் படைத் தலைவரைத் தருகவென்றலும், அவர் வருதலும், அவர் வந் துழி இன்னது செய்கவென்றலும், அவர் வேந்தர்க்கு உரைத் தலும், அவர் படையைக் கூஉய் அறிவித்தலும், படைச் செருக்கும், அதனைக் கண்டோர் கூறலும், அவர் பகைப்புலக் கேட்டிற்கு இரங்கி வருந்தலும், நாட்கோடலும், அவர் கொற்றவைக்குப் பரவுக்கடன் பூண்டலும் பிறவுமாம். களவிற் செல்வோர்க்கும் அரவங்கூறினர், அவர் பாக்கத்தேதங்கி விரிச்சிபெற்றுப் போதலின். அவற்றுட் சில வருமாறு:—

"கடிமனைச் சீறூர்க் கடுங்கட் கறவை
வடிநவில் வேலோன் மறுத்தோம்ப [1]வேட்டா
னடிபுனை தோலி னரண்சேர்ந்து மள்ளர்
வருகமன் வாயிற் கடை."

இது படைத்தலைவர் படையாளரைக் கூயினது.

"வாள்வலம் பெற்ற வயவேந்த னேவலாற்
றாள்வ லிளையவர் தாஞ்செல்லி—ஞாளக்
கனைகுர னல்லாத்தன் [2]கன்றுள்ளப் பாலா
னனைவது [3]போலுநம் மூர்."

(பெரும்பொருள் விளக்கம்: புறத்திரட்டு - 753.)

இது படைச்செருக்கு: கண்டோர் கூறியது.

(பி - ம்)—[1]லொட்டா னடிபுணர்.
மிவ்வூர்.

[2]கன்றுள்ளிப். [3]போலு புறத். ரு]


" வந்த நிரையி னிருப்பு மணியுட
னெந்தலை நின்றலை [1]யார்தருது—முந்நீ
மற்றவை பெற்று வயவேந்தன் கோலோங்கக்
கொற்றவை கொற்றங் கொடு."

(பெரும்பொருள் விளக்கம் : புறத்திரட்டு - 754.)

இது தெய்வத்திற்குப் பராஅயது.
பிறவும் வருவனவெல்லாம் இதனுள் அடக்குக.

இனிப் பாக்கத்து விரிச்சிக்குக் காரணங்களாவன :-பாக்கத்துச் சென்றுழி இருப்பு வகுத்தலும், பண்டத்தொடு வல்சி ஏற்றிச் சென்றோரை விடுத்தலும், விரிச்சி வேண்டாவென விலக்கிய வீரக்குறிப்பும், விரிச்சிக்கு வேண்டும் நெல்லும் மலரும் முதலியன தருதலும், பிற நிமித்தப் பகுதிகளும், அவை அறிந்தோர்க்குச் சிறப்புச்செய்தலும் பிறவுமாம். உதாரணம் :—

" நாளும் புள்ளுங் கேளா வூக்கமொ
டெங்கோ னேயின னதலின் யாமத்துச்

செங்கால் வெட்சியுந் தினையுந் தூஉய்
மறிக்குரற் குருதி மன்றுதுக ளவிப்ப
விரிச்சி யோர்த்தல் வேண்டா
வெயிற்புறந் தருதும்யாம் பகைப்புல நிரையே.''

(தகடூர் யாத்திரை : புறத்திரட்டு - 755.)

இது விரிச்சி விலக்கிய வீரக்குறிப்பு.

பிறவும் வந்துழிக் காண்க.

அரசன் ஏவலாற் போந்தோரும் விரிச்சி கேட்டார் இன்ன ஞான்று வினவாய்க்குமென்று அறிதற்கு.

இனி வேய்க்குக் காரணங்களாவன வேய் கூறினார்க்குச் சிறப்புச் செய்தல் போல்வன. உதாரணம் :—

"மாற்றருந் துப்பின் வயவேந்த னல்லனே
யேற்ற பெருஞ்சிறப் பின்றீதும்—வேற்றூரிற்
புல்வேய் குரம்பைப் புறஞ்சிறைவாய் நின்றொற்றி
நல்வே யுரைத்தார்க்கு நாம்.''

என வரும்.

(பி - ம்)—[1]யான்றருவான்.



இனி ஏனைய ஒன்று பலவாய்த் துறைப்பாற்படுவன வந்துழிக் காண்க.

இங்ஙனம் புறத்திணைக்குச் சிறுவரவிற்றாதலினன்றே 'பாடல் சான்ற புலனெறி வழக்கம்'(53) என்று அகத்திற்குக் கூறியது. நிரைமீட்குங்கால் அறிந்தார் அறிந்தவாற்றானே விரைந்து சென்று மீட்பாராதலின் அரசனை உணர்த்தாதே மீட்டல் பெறுதும்: இவற்றிற்குந் துறைப்பகுதி கொள்க. (௩)

**59.** மறங்கடைக் கூட்டிய துடிநிலை சிறந்த
கோற்றவை நிலையு மத்திணைப் புறனே.

இவையும் வெட்சித்திணையா மென்கின்றது.[1]

இதன் பொருள்:—மறங்கடைக் கூட்டிய துடிநிலை - போர்க்களத்து மறவரது மறத்தினைக் கடைக்கூட்டிய துடிநிலையும், சிறந்த கொற்றவை நிலையும் - அத்தொழிற்குச் சிறந்த கொற்றவைக்குப் பரவுக்கடன் கொடுக்குங்கால் அவளது நிலைமை கூறுதலும், அத்திணைப்புறனே - அவ்விருவகை வெட்சிக்கும் புறனடையாம் என்றவாறு.

"நித்திலஞ்செய் பட்டமு நெற்றித் திலதமு
மொத்திலங்க மெய்பூசி யோர்த்துடீஇத்—தத்தம்
துடியரோ டோர்ப்புறஞ் சூழ்ந்தார் மறவர்
[2]குடிநிரை பாராட்டக் கொண்டு."

[1]சிலப்-12. வேட்டுவவரி, உரை :—'உட்குடைச் சீறூரொருமகனு னிரைகொள்ள உற்ற காலை - வெட்சிமலர் புனைய வெள்வா ளுழத்தி யும் வேண்டும் போலும் - வெட்சிமலர் புனையவெள்வா ளுழத்தியும் வேண்டின் வேற்றூர்க் - கட்சியுட் காரி கடிய குரலிசைத்துக் காட் டும்போலும்' இது கொற்றவை நிலை...இது வெட்சி. 'கள்விலை யாட்டி மறுப்பப் பொருமறவன் கைவி லேந்திப் - புள்ளும் வழிபட ரப் புல்லார் நிரைகருதிப் போகும் போலும் - புள்ளும் வழிபடாப் புல்லார் நிரைகருதிப் போகுங் காலைக் - கொள்ளுங் கொடியெடுத் துக் கொற்றவையும் கொடுமரமுன் செல்லும் போலும்' என்பது 'அருஅநிலைச் சாடி...நேரார்நிரை'. எனவரும். இது தன்னூறு தொழில். இதுவும் கொற்றவைநிலைப்பாற்படும்.

(பி - ம்)—[2]குடிநிலை பாராட்டிக்.



இஃது இருவகை வெட்சிக்கும் பொது : நிரைகொண் டோர்க்கும் மீட்டோர்க்குந் துடிகொட்டிச் சேறலொத்தலின்.

" அருமைத் தலைத்தரு மானிரையு ளையை
யெருமைப் பலிகோ ளியைந்தா—ளரசனும்
வேந்தன்மேற் செல்வான் விறல்வஞ்சி சூடானென்
றியாந்தன்மேற் சீறும வின்று."

இதனானே வருகின்ற வஞ்சித்திணைக்குங் கொற்றவை நிலை காரணமாயிற்று : தோற்றோர்க்குக் கொற்றம் வேண்டி யும் வென்றோர்க்கும் மேற்செல்லுங்காற் கொற்றம் வேண்டி

யும் வழிபடுவராதலின்.

இனிக் கொற்றவைநிலைப் பகுதியுட் சில வருமாறு :—

" நச்சிலைவேற் காளைக்கு நாளையே கொற்றவை
கைச்சிலையு நல்கும்யாங் காணேங்கொன்—மிச்சில்கூர்
வாளின்வாய்த் தீண்டாத வார்குருதி மெய்சாய்ப்பத்
தாளின்வாய் வீழ்த்தான் றலை."

இஃது உயிர்ப்பலி. இது பொதுவகையான் வெட்சிக்கும் வஞ்சிக்கும் பொது.

இருவகை

"[1]ஆடிப்பண் பாடி யளவின்றிக் கொற்றவை
பாடினி பாடற் படுத்துவந்தா—ளாடிய
தோளுழலை யாடுவோன் றோளினுந் தூக்கமைத்த
தாளுழலை யாடுவேன் றான்."

இது குருதிப்பலி. இது பொதுவகையான் இருவகை வெட்சிக்கும் வஞ்சிக்கும் பொது. (௪)

**60.** வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்
வெறியாட் டயர்ந்த காந்தளு முறுபகை
வேந்திடை தெரிதல் வேண்டி யேந்துபுகழ்ப்

போந்தை வேம்பே யாரென வரூஉ
மாபெருந் தானையர் மலைந்த பூவும்
வாடா வள்ளி வயவ ரேத்திய
வோடாக் கழனிலை யுளப்பட வோடா
வுடல்வேந் தடுக்கிய வுன்ன நிலையு

(பி - ம்)—[1] ஆடினிப்பாடி.





மாயோன் மேய மன்பெருஞ் சிறப்பிற்
றுவா விழுப்புகழ்ப் பூவை நிலையு
மாரம ரோட்டலு மாபெயர்த்துத் தருதலுஞ்
சீர்சால் வேந்தன் சிறப்பெடுத் துரைத்தலுந்
தலைத்தா ணெடுமொழி தன்னொடு புணர்த்தலு
மனைக்குரி மரபினது கரந்தை யன்றியும்
வருதார் தாங்கல் வாள்வாய்த்துக் கவிழ்தலென்
றிருவகைப் பட்ட பிள்ளை நிலையும்
வாண்மலைந் தெழுந்தோனை மகிழ்ந்துபறை தூங்க

நாடவற் கருளிய பிள்ளை யாட்டுங்
காட்சி கால்கோ ணீர்ப்படை [1]நடுதல்
[2]சீர்த்தகு சிறப்பிற் பெரும்படை வாழ்த்தலென்
றிருமூன்று [3]வகையிற் கல்லொடு புணரச்
சொல்லப் பட்ட [4]வெழுமூன்று துறைத்தே.

*இது முன் இருபெரு வேந்தர்க்கும் போர்செயத் தொடங்குதற்குரிய பொதுநிலைமை கூறிய அதிகாரத்தானே புறத்திணைக்கெல்லாம் பொதுவாகிய வழுவேழும் உணர்த்துதல் நுதலிற்று.*

*இவை வேத்தியலின் வழீஇத் தன்னுறு தொழிலாய் வருதலின் வழுவாயின. இவை அகத்திற்கும் புறத்திற்கும் உரியவாய் வருவனவும் புறத்திற்கெல்லாம் பொதுவாய் வருவனவுமாதலிற் பொதுவியலுமாயின.*

*இதன் பொருள் :—வெறி அறி சிறப்பின் - தெய்வத்திற்குச் செய்யுங் கடன்களை அறியுஞ் சிறப்பினையும், வெவ்வாய் வேலன்-உயிர்க்கொலைகூறலின் வெவ்வாயினையும் உடையனாகிய வேலன், வெறியாட்டு அயர்ந்த காந்தளும் - தெய்வமேறியாடுதலைச் செய்த காந்தளும் :*

*செவ்வேள் வேலைத் தான் ஏந்தி நிற்றலின் 'வேலன்' என்றார். காந்தள் சூடி ஆடுதலிற் 'காந்தள்' என்றார். வேலனைக் கூறினமையிற் [5]கணிகாரியையுங் கொள்க. காந்தளை யுடைமை*

---

(பி - ம்)—[1]நடுகல். [2]சீர்த்த. [3]மரபிற். [4]மூவேழ்.

[5]கணிக்காரிகையுங். புறத். ரு]

யானும், பனந்தோடுடைமையானும்[1], மகளிரை வருத்துத
லானும் 'வேலன் வெறியாட்டயர்ந்த' என்றதனானும், வேலன் ஆடுதலே பெரும்பான்மை; ஒழிந்தோர் ஆடுதல் சிறுபான்மையென்றுணர்க.[2] உதாரணம்:—

" அமாகத்துத் தன்னை மறந்தாடி யாங்குத்
தமாகத்துத் தன்மறந் தாடுங்—குமரன்முன்
கார்க்காடு நாறுங் களனிழைத்துக் [3]காரிகையா
ரேர்க்காடுங் காளை யிவன்."

இது [4]சிறப்பறியா மகளிராடுதலிற் புறனாயிற்று.

வேலனாடுதல் அகத்திணைக்குச் சிறந்தது.

உதாரணம்:—

" அணங்குடை நெடுவரை யுச்சியி னிழிதருங்
கணங்கொ ளருவிக் கான்கெழு நாடன்
மணங்கமழ் வியன்மார் பணங்கிய செல்ல
லிதுவென வறியா மறுவாற் பொழுதிற்
படியோர்த் தேய்த்த பல்புகழ்த் தடக்கை
நெடுவேட் பேணத் தணிகுவ ளிவளென
முதுவாய்ப் பெண்டி ரதுவாய்க் கூறக்
களனன் கிழைத்துக் கண்ணி சூட்டி
வளநகர் சிலம்பப் பாடிப் பலிகொடுத்

துருவச் செந்தினை குருதியொடு தூஉய்
முருகாற்றுப் படுத்த வுருகெழு நடுநா
ளார நாற வருவிடர்த் ததைந்த
சாரற் பல்பூ வண்டுபடச் சூடிக்
களிற்றிரை தெரீஇய பார்வ லொதுக்கி

[1]“வேண்போழ் கடம்பொடு சூடி யின்சீர்
ஐதமை பாணி யிரீஇக் கைபெயராச்
செல்வன் பெரும்பெய ரேத்தி வேலன்
வெறியயர் வியன்களம்.” (அகம் - 98.)

[2]திருமுருகு - குறமகள் முருகியம் நிறுத்து முரணினர் உட்க முருகாற்றுப்படுத்த உருகெழு வியனகர். ‘வேலன் வெறியாட் டயர்ந்த’ என்புழிச் சிறுபான்மை ஏனையோரும் ஆடுவார் என்றலின், குறமகள் வெறியாட்டுக் கூறினார். நச். குறிப்பு.

(பி - ம்)—[3]கார்ரிகை யார்க்காடும். [4]சிறப்புப்பற்றி யாடு மகளி ராதலிற்.



ஒளித்தியங்கு மரபின் வயப்புலி போல
நன்மனை நெடுநகர்க் காவல ரறியாமைத்

தன்னசை யுள்ளத்து நன்னசை வாய்ப்ப
வின்னுயிர் குழைய முயங்குதொறு மெய்ம்மலிந்து
நக்கனெ னல்லனோ யானே யெய்த்த
நோய்தணி காதலர் வரவீண்
டேதில் வேலற் குலந்தமை கண்டே." (அகம் - 22)

[1]'பனிவரை நிவந்த' என்னும் அகப்பாட்டும் அது.

இவற்றுட் சேயோன் கருப்பொருளாக மைவரை யுலகத்துக் கூதிர்யாமம் பொழுதாகச் சிறப்பறியும் வேலன் ஆடுதலின், வெறியாடிய காந்தள் அகத்திற்கு வந்தது. இது வேத்தியற் கூத்தன்றிக் [2]கருங்கூத்தாதலின் வழுவுமாய், அகத்திற்கும் புறத்திற்கும் பொதுவாதலிற் பொதுவியலுமாயிற்று. [3]'வேலன் றைஇய வெறியயர் களனும்' என்றாற் போலச் சிறப்பறியும் வேலன் தானே ஆடுதலுஞ் சிறுபான்மை புறத்திற்குங் கொள்க.

மாவரும் புகழ் ஏந்தும் பெருந் தானையர் - மா முதலியனவற்றால் தமக்கு வரும் புகழைத் தாங்கும் மூவேந்தருடைய பெரும்படையாளர், உறு பகை வேந்திடை தெரிதல் வேண்டிப் போந்தை வேம்பே ஆர் என மலைந்த பூவும் - அம்புகழ்தான் உறும் பகைபிடத்து இன்னவேந்தன் படையாளர் வென்றார் என்பதற்கு ஓர் அறிகுறி வேண்டிப் போந்தை வேம்பு ஆரென்று கூறிச் சூடின பூவும்:

இதன்கருத்து: ஏழகத்தகரும் யானையும் நாயும் கோழியும் பூழும் வட்டும் வல்லுஞ் [4]சொல்லும் முதலியவற்றால் தமக்கு வரும் வெற்றிப் புகழைத் தாம் எய்துதற்குத் தத்தம் வேந்தர் அறியாமற் படைத்தலைவர் தம்முள் மாறாய் வென்று ஆடுங்கால் இன்ன அரசன் படையாளர் வென்றாரென்றற்கு அவரவர் பூச் சூடி ஆடுவர் என்பதூஉம், அக்கூத்தும் வேத்

[1]அகம் - 98. [2]'கருங்கூத்து' என்பதற்கு 'தண்ணிய நாடகம்' எனப் பொருள் கூறப்பட்டுளது : கலி - 65, உரை.

[3]முருகு - 222 : நச். குறிப்பு - பிள்ளையார் வேலைத் தனக்கு அடையாளமாகக் கொண்டு திரிதலின், வேலன் என்றார்.

(பி - ம்)—[4]சொல்லிய முதலியவாற்றால்; சொல்லியவாற்றால்.



இயற் கூத்தின் வழீஇயின கருங்கூத் தென்பதூஉம், அது தன்னுறு தொழிலென்பதூஉம் உணர்த்தியதாம். இதனை இங்ஙனந் தன்னுறு தொழிலாக்காமல் வேந்துறு தொழிலாக்கின் அது தும்பையாம். புகழ்ந்து கூறிற்றெனிற் பாடாண்டிணையாம். ஆசிரியர் [1]வெறிக்கூத்திற்கும் வள்ளிக்கூத்திற்கும் இடையே இதனை வைத்து இக்கருத்தானே யென்றுணர்க. உதாரணம் :—

“ஏழக மேற்கொண் டிளையோ னிகல்வென்றான்
வேழ மிவனேற வேந்தனவோ—வேழுலகுந்
தாந்தயங்கு நாகந் தலைதயங்க வாடாமோ
போந்தையங் கண்ணி புனைந்து.”

இது போந்தை மலைந்தாடியது.

“குறும்பூழ்ப்போர் கையெறிந்து கொற்றம் பெறுத
விறும்பூதென் றியாமாடல் வேண்டா—செறுங்கோன்
குலமதிக்கு மாறறியிற் கொற்றவன் வேம்பு
தலைமலையற் பாலதூஉ மன்று.”

இது வேம்பு தலைமலைந்தாடியது.

“ஆர்வேய்ந்த கோலத்தோ டாடுவர் பாடுவர்
போர்வேந்தர் பெற்றநாள் போன்றுவப்பர்—சீர்சால்
பறைகெழு வாரணப்போர் பண்டிகழ்ந்தோ ரின்று
சிறைகெழு வாரணப்போர் செய்து.”

இஃது ஆர் மலைந்தாடியது.

இவை தன்னுறு தொழிலாயவாறு காண்க.

[2]வாடா வள்ளி-வாடுங் கொடியல்லாத வள்ளிக்கூத்தும்,

---

[1]வெறிக்கூத்து என்பது விநோதக்கூத்து எழனுள் ஒன்று. சிலப். 3, 12, உரை.

[2]பெரும்பாண் - 'வாடா வள்ளியின் வளம்பல தரூஉம் நாடுபல கழிந்த பின்றை' நச். குறிப்பு. சிறப்புடைய நாடுகளைப் பாடித் தாழ்ச்சிபெற்ற இழிகுலத்தோர் உறையும் புறநாடுகளைப் பாடாமல் தொகுக்கின்றார். அவை புறநாடு என்பது தோன்ற அவர்கள் காண்டற்குரிய வள்ளிக் கூத்தினைக் கூறி அதனை வெளிப்படுத்தினார். வெறியறி சிறப்பு' என்னும் சூத்திரத்து 'வாடா வள்ளி' என்பது



அஃது இழிந்தோர் காணுங்கூத்து.

உதாரணம் :—

"மண்டம ரட்ட மறவர் குழாத்திடைக்.
கண்ட முருகனுங் கண்களித்தான்—பண்டே
குறமகள் வள்ளிதன் கோலங்கொண் டாடப்
பிறமக ளேற்றாள் பெரிது."

இது பெண்பாற்குப் பெருவரவிற்று. இதனைப் பிற் கூறினார் வெறியறி சிறப்பன்மையானும் ஆண்பாற்கும் பெண்பாற்கும் பொதுவாவதல்லது அகத்திணைக்கண் வந்து பொதுவாகாமையும் பற்றி.

வயவர் ஏத்திய ஓடாக் கழனிலை உளப்பட - முன்பு கழல்கால்யாத்த வீரர் [1]இளமைப் பருவத்தானொருவன் களத்திடை ஓடாது நின்றமைகண்டு அவனைப் புகழ்ந்து அவற்குக் கட்டிய கழனிலைக் கூத்து :

ஓடாமையாற் கட்டின கழல், ஏத்திய நிலையாற் கட்டின கழல்.

---

ஞனும், 'மண்டம ரட்ட மறவர் குழாத்திடை' என்னும் உதாரணத்தானும் உணர்க. சிலப். 12. வேட்டுவவரி.

" கொற்றவை கொண்ட அணிகொண்டு நின்றவிப்
பொற்றொடி மாதர் தவமென்னை கொல்லோ
பொற்றொடி மாதர் பிறந்த குடிப்பிறந்த
விற்றொழில் வேடர் குலனே குலனும்.

" ஐயை திருவி னணிகொண்டு நின்றவிப்
பையர வல்குல் தவமென்னை கொல்லோ
பையர வல்குல் பிறந்த குடிப்பிறந்த
எய்வி லெயினர் குலனே குலனும்.

" பாய்கலைப் பாவை யணிகொண்டு நின்றவிவ்
வாய்தொடி நல்லாள் தவமென்னை கொல்லோ
ஆய்தொடி நல்லாள் பிறந்த குடிப்பிறந்த
வேய்வி லெயினர் குலனே குலனும்."

இவை மூன்றும் 'வாடா வள்ளி வயவ ரேத்திய' என்பதனால் வள்ளிக்கூத்து. என்னை? 'மண்டம ரட்ட...பெரிது' என வரும். அடியார். உரை.

---

(பி - ம்)—[1]மழலைப்.



இது வள்ளிப்பின் வைத்தலின் இருபாலாரும் ஆடுதல் கொள்க. கொடி முதலியன அவனை வியந்து கொடுத்தல் அத் துறைப் பகுதியாம். உதாரணம்:—

"மீளா து பெற்ற விறற்கழலோன் வாளாட்டின்
வாளாடு கூத்திவன் தாடினன்—வாளாட்டின்
மண்ணுளு மன்னரே பெண்ணுவார் வண்மைக்குப்
பெண்ணுடின் யாதாம் பிற."

ஓடா உடல் வேந்து அடுக்கிய உன்ன நிலையும் - பிறக்கடி யிடா உடன்ற வேந்தனை உன்னமரத்துடன் அடுக்கிக் கூறப் பட்ட உன்ன நிலையும்:

என்றது, வேந்தன் கருத்தானன்றி அவன் மறவன் வேந்தற்கு நீ வென்றிகொடுத்தால் யான் நினக்கு இன்னது செய்வலெனப் பரவுதலும், எம்வேந்தற்கு ஆக்கம் உள தெனின் அக்கோடு பொதுளுக எனவும் பகைவேந்தற்கு ஆக்கம் உளதெனில் அக்கோடு படுவதாக எனவும் நிமித்தங் கோடலும், எனவிருவகைத் தெய்வத் தன்மை. அஃதுடை மையான் 'அடுக்கிய உன்ன நிலையும்' என்றார். உதாரணம்:—

“ துயிலின் கூந்தற் றேளிணைப் பேதை
வெயினிழ லொழிய வெஞ்சுரம் படர்ந்து
செய்பொருட் டிறவீ ராகிய நும்வயி
னெனக்கொன்று மொழியின ளாகத் தனக்கே
யருநகை தோன்றிய வழுகுரற் கிளவியள்
கலுழ்கண் கரந்தன டானே யினியே
மன்னவற் பராஅய் முன்னியது முடித்தோ
ருன்னஞ் சிறக்கு மொள்வினை நினைஇத்
தலைசாய்த் திருந்த சிலைவலம் போற்றி
வேந்துவழக் கறுத்த கான
நீந்த லொல்லுமோ பூந்தொடி யொழிந்தே.”

இதனுள்,

“ மன்னவற் பராஅய் முன்னியது முடித்தோ
ருன்னஞ் சிறக்கு மொள்வினை நினைஇ”

என்றது வேந்தனைப் பரவுக்கடனுகை அடுக்கிய உன்னநிலை.

“ முன்னங் குழையவுங் கோடேலா மொய்தளிரீன்
றுன்னங் குழையொலித் தோங்குவாய்—மன்னரைக்



கொன்று களங்கொள்ளுங் கொல்யானை வேந்தனை
வென்றுகளங் கொள்ளுமேல் வேந்து.”

இவை மறவர் செய்தலின் தன்னுறு

தொழிலாம்.

"பொன்னன்ன பூவிற் சிறிய விலைப்புன்கா
[1]லுன்னத் தகையனெங் கோ."

என்பதும் அது.

இரண்டு நிலையாற் பொதுவுமாயிற்று. மன்னவன் வெற்றியே கருதாது இங்ஙனம் இருநிலைமையுங் கருதுதலின் வழுவுமாயிற்று.

மாயோன் மேய மன்பெருஞ் சிறப்பிற் றுவா விழுப் புகழ்ப் பூவைநிலையும் என்றது: மாயோன் விழுப்புகழ் - மாயனுண்டய காத்தற் புகழையும், மேய பெருஞ் சிறப்பிற் றுவா விழுப்புகழ் - ஏனோர்க்கும் உரியவாய் மேவிய பெரிய தலைமையிற் கெடாத படைத்தல் அழித்தலென்னும் புகழ்களையும், மன்பூவைநிலையும் - மன்னர் தொழிலுக்கு உவமையாகக் கூறும் பூவைநிலையும்:

என்றது ஒன்றனை ஒன்றுபோற்கூறுந் துறை. 'மன்' என்ப் பொதுப்படக் கூறியவதனன் நெடுநிலமன்னர்க்கும் குறுநிலமன்னர் முதலியோர்க்குங் கொள்க. 'பெருஞ் சிறப்பு' என்றதனற் படைத்தலுங் காத்தலும் அழித்தலுமன்றி அவரவர் தா ரகக் கூறலும் முருகன் இந்திரன் முதலியோராகக் கூறலுங் கொள்க. உதாரணம்:—

“ஏற்றுவல னுயரிய வெரிமரு ளவிர்சடை
மாற்றருங் கணிச்சி மணிமிடற் றோனுங்
கடல்வளர் புரிவளை புரையு மேனி
யடல்வெந் நாஞ்சிற் பனைக்கொடி யோனு
மண்ணுறு திருமணி புரையு மேனி
விண்ணுயர் புட்கொடி விறல்வெய் யோனு
மணிமயி லுயரிய மாறா வென்றிப்
பிணிமுக வூர்தி யொண்செய் யோனுமென
ஞாலங் காக்குங் கால முன்பிற்
றோலா நல்லிசை நால்வ ருள்ளுங்
கூற்றொத் தீயே மாற்றருஞ் சீற்றம்

(பி - ம்)—[1]லுன்னப் பகைவனெங் கோன்.



வலியொத் தீயே வாலி யோனைப்
புகழொத் தீயே யிகழுந ரடுநனை
முருகொத் தீயே முன்னியது முடித்தலி
னாங்காங் கவரவ ரொத்தலின் யாங்கு
மரியவு முளவோ நினக்கே.” (புறம் - 56.)

[1]என்பதன்கண் அங்ஙனம் உவமித்தவாறு காண்க.

" குருந்த மொசித்தஞான் றுண்டா லதனைக்
காந்த படியெமக்குக் காட்டாய்—மரம்பெறுப்
போரிற் குருகுறங்கும் பூம்புன னீர்நாட
மார்பிற் கிடந்த மறு."

இது சோழனை மாயோனாகக் கூறிற்று.

" ஏற்றூர்தி யானு மிகல்வெம்போர் வானவனு
மாற்றலு மாள்வினையு மொத்தொன் றி னெவ்வாரே
கூற்றக் கணிச்சியோன் கண்மூன் றிரண்டேயா
மாற்றல்சால் வானவன் கண்."

இது சேரனை அரனாகக் கூறியது.

" இந்திர னென்னி னிரண்டேக ணேறூர்ந்த
வந்தரத்தா னென்னிற் பிறையில்லை—யந்தரத்துக்
கோழியா னென்னின் முகமொன்றே கோதையை
யாழியா னென்றுணரற் பாற்று."

இது சேரனைப் பலதேவராகக் கூறிற்று.

"கோவா மலையாரங் கோத்த..." (சிலப் - 17 - உள்வரி.)

"முந்நீ ருள்புக்கு மூவாக்..." (சிலப் - 17 - உள்வரி.)

"பொன்னிமையக் கோட்டுப் புலி..." (சிலப் - 17 - உள்வரி.)

[2]என்பனவும் அவை.

"தாமரைக் கண்ணியை தண்ணறுஞ் சாந்தினை
. . . சிறுகுடி யோரே." (கலி - 52.)

இஃது உரிப்பொருட் டலைவனை முருகனுகக் கூறியது. இங்ஙனம் புறத்தும் அகத்தும் வருதலிற் பொதுவாயிற்று. இறப்ப உயர்ந்த தேவரை மக்கட்கு உவமையாகக் கூறலின் வழுவுமாயிற்று.

(பி - ம்)—[1]என இதனுள். [2]என்பதும் அது.



'தாவா'என்றதனனே அரசர்புகழைக் காட்டுவாழ்வோர்க்குக் கூறுதலும் அவரை அரசர்பெயராற் கூறுதலுங் கொள்க.

"வீங்குசெலற் பரிதி வெவ்வெயி லெறித்தலி
னுங்க ளுக்கா தாங்கு நீபோ
யாசுநுகம் பூண்ட பின்னர் கின்னிலை
முரசுடை வேந்தர் முகந்திரிந் தனரே
யஃதான்
றுவவுமதி நோக்குநர் போலப் பாணரொடு
வயிரியர் பொருநர்நின் பதிநோக் கினரே

யதனு
[1]னதளுங் கோடு முதலிய கூட்டுண்
டிகலி னிசைமேஎர் தோன்றிப்
பலவா கியகில நீபெறு நாளே."

இது முடியுங் குடையும் ஒழித்து அரசர்க்குரியன கூறி இழித்துக் கூறியும் புகழ்மிகுத்தது.

[1]'பல்லிதழ் மென்மலர்' என்னும் அகப்பாட்டினுள்

"அறனில் வேந்த னாளும்
வறனுறு குன்றம் பலவிலங் கினவே."

எனக் காட்டுத் தலைவனை நாட்டுத் தலைவன் பெயராற் கூறினார்.

ஆர் அமர் ஓட்டலும் - குறுநிலமன்னருங் காட்டகத்து வாழும் மறவரும் போர்த்தொழில் வேந்தரைப் பொருது புறங்காண்டலும்: உதாரணம்:—

"பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின்
மின்னேர் பச்சை மிஞிற்றுக்குரற் சீறியாழ்
நன்மை நிறைந்த நயவரு பாண
சீறூர் மன்னன் சிறியிலை யெஃகம்
வேந்தூர் யானை யேந்துமுகத் ததுவே
வேந்துடன் றெறிந்த வேலே யென்னை
சாந்தா ரகல முளங்கழிந் தன்றே
யுளங்கிழி சுடர்ப்படை யேந்திநம் பெருவிற
லோச்சினன் றுரந்த காலை மற்றவன்

(பி - ம்)—[1]அதர்:

"அதர்கூட் டுண்ணு மணங்குடைப் பகழி"

[1]அகம் - 167. [2]அகம் - 109.

புன்றலை மடப்பிடி நாணக்
குஞ்சர மெல்லாம் புறக்கொடுத் தனவே."

(புறம் - 308.)

இது சீறூர்மன்னன் வேந்தனைப் புறங்கண்டது.

"கள்ளின் வாழ்த்திக் கள்ளின் வாழ்த்திக்
காட்டொடு மிடைந்த சீயா முன்றி
ஞட்செருக் கனந்தர்த் துஞ்சு வோனே
யவனெம் மிறைவன் யாமவன் பாணர்
நெருநை வந்த விருந்திற்கு மற்றுத்தன்
னிரும்புடைப் பழவாள் வைத்தன னின்றிக்
கருங்கோட்டுச் சீறியாழ் பணைய மிதுகொண்
டீவதி லாள னென்னு நீயுநின்
வள்ளி மருங்குல் வயங்கிழை யணியக்
கள்ளுடைக் கலத்தேம் யாமகிழ் தூங்கச்
சேறுகவாய் சிவந்துமேல் வருக
சிறுகண் யானை வேந்துவிழு முறவே." (புறம் - 316.)

இது மறவன் ஆரமரோட்டல் கூறியது.

இவை தன்னுறுதொழில் கூறியன.

